## ஸ்ரீ ராமகிருஷ்ணமடம் - ராமேஸ்வரம்

ராமேஸ்வரம் க்ஷேத்திர யாத்திரை பண்ணும் நம் அன்பர்கள் வசதிக்காகவென்று திருவருள் சகாயத்தால் 1981ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12ஆம் தேதி ஸ்ரீ ராமநவமியன்று இந்த ஆச்ரமம் துவக்கப்பெற்றது. அன்று முதல் இது ஒழுங்காக நடைபெற்று வருகிறது. இந்த ஆண்டு ஏப்ரல் மாதம் 21ஆம் தேதி ஸ்ரீ ராமநவமியன்று ஆச்ரமத்தின் ஆண்டுவிழா கொண்டாடப்பெறும்.

**நிகழ்ச்சி முறை**

| | |
|---|---|
| காலை 9 மணி | ஸ்ரீ ராமநாத சுவாமி ஆலயத்திற்கு நாமஜபம் செய்து கொண்டுபோய் தர்சனம் செய்தல். |
| ,, 11 மணிமுதல் 12 மணிவரை | மடத்தில் ஸ்ரீ ராமநாம சங்கீர்த்தனமும், ஐக்கிய வணக்கமும். |
| பகல் 12 மணி | மகேசுவர பூஜை. |
| மாலை 5 மணிமுதல் 7-30 மணிவரை | பேச்சும் கலாநிகழ்ச்சியும் நடைபெறும். |

விரும்புகிற அன்பர்கள் இதில் வந்து கலந்துகொள்ள வரவேற்கப்படுகின்றனர்.

## DHARMA CHAKRAM

*Statement about ownership and other particulars about Newspaper 'Dharma Chakram' to be published in the first issue every year after the last day of February.*

FORM IV
(See Rule 8)

| | |
|---|---|
| 1. Place of Publication : | Tirupparaitturai |
| 2. Periodicity of its Publication : | Monthly |
| 3. Printer's name : | Swami Sankarananda |
| Nationality : | Indian |
| Address : | Tapovanam Printing School, Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |
| 4. Publisher's name : | Swami Sankarananda |
| Nationality : | Indian |
| Address : | Sri Ramakrishna Tapovanam, Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |
| 5. Editor's name : | Swami Nithyananda |
| Nationality : | Indian |
| Address : | Sri Ramakrishna Tapovanam, Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |
| 6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : | Sri Ramakrishna Tapovanam Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |

*I, Sankarananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

Sankarananda
Signature of the publisher.

Date 14–3–83.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

சக்கரம் 32 | துந்துபி ஹூ பங்குனி மீ | ஆரம் 3

## பொருளடக்கம்



| | | | | |
|---|---|---|---|---|
| வருட சந்தா : | உள்நாடு | ரூ. 15-00 | வெளிநாடு | ரூ. 35-00 |
| தனி இதழ் | ,, | ரூ. 1-50 | ,, | ரூ. 3-00 |

## அந்தர்யோக விவரங்கள்

**திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 27—3—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: அருள்மிகு அகஸ்தியர் திருக்கோவில்

நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்

**மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 27—3—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 3—4—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ விவேகானந்த கல்லூரி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

உணவு வசதி: பகல் உணவு ரூ. 1-50; மாலைச் சிற்றுண்டி ரூ. 1-00 நேரில் செலுத் [தலாம்.

[தொடர்ச்சி பின்பக்கம் பார்க்க]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**வடஆற்காடு ஜில்லா—வேலூரில் 3—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்; ஸ்ரீராமகிருஷ்ண ஆஸ்ரமம் (பாலாற்றின் தென்கரை பழைய பாலம் அருகில்)*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*
*உணவு வசதி: மதிய உணவுக்கு ரு. 1-50 நேரில் செலுத்திப் பதிவு செய்துகொள்ளலாம்.*

**மதுரை ஜில்லா—தேனியில் 6—4—83 புதன்கிழமை**

*இடம்: ஸ்ரீ கணேச கந்தபெருமாள் ஆலயம், தியாகராஜ நகர்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்*
*உணவுவசதி: மதிய உணவுக்கு ரு.1-50 செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**மதுரை ஜில்லா—காமயகவுண்டன்பட்டியில் 9—4—83 சனிக்கிழமை**

*இடம்: கஸ்தூரிபாய் நடுநிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**மதுரை ஜில்லா—திண்டுக்கல்லில் 10—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: அய்யப்பன் பிரார்த்தனை மண்டபம், மலையடிவாரம், திண்டுக்கல்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*
*உணவு வசதி: பகல் உணவுக்கு நேரில் பணம் செலுத்திச் சீட்டுப் பெறலாம்.*

**இராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 10—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ சாரதா சேவாஸ்ரமம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்*

**பெரியார் ஜில்லா—ஆப்பக்கூடல் புதுப்பாளையத்தில் 10—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண சமரச சன்மார்க்க சங்கம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்*

**சேலம் ஜில்லா—சேந்தமங்கலத்தில் 16—4—83 சனிக்கிழமை**

*இடம்: கன்னிகா பரமேஸ்வரி அம்மன், கல்யாண மண்டபம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**பெரியார் மாவட்டம்—பவானியில் 17—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ ஐயப்ப சேவா மிஷன் மண்டபம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

---

*அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.*



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| | | |
|---|---|---|
| சக்கரம் 32 | துந்துபி ஹூ பங்குனி மீ | ஆரம் 3 |


## பிரார்த்தனை

नित्यबुद्धविशुद्धैक सच्चिदानन्दमस्म्यहम् ।

— तेजोबिन्दुपनिषत्

*நித்ய புத்த விசுத்த ஏக ஸச்சிதானந்தம் அஸ்மி அஹம் ।*

*— தேஜோபிந்துபநிஷதம்*

*நான் யாண்டும் சச்சிதானந்தம்; பரபோதம்; விசுத்தம்.*

ஒன்ருய்ப் பலவாய் உலகம்எங்கும் தானேயாய்
நின்ருய்ஐ யாஎனே நீங்கற்கு எளிதாமோ.

*— தாயுமானவர்*

# அருள் விருந்து

அனைத்தையும் ஆதரிப்பது அறம்.

மனதைப் பண்படுத்துபவன் மாணுக்கன்.

மனச் சாட்சி ஆற்றல் மிக வாய்க்கப் பெற்றது.

சத்தியத்தைச் சார்ந்திருப்பவன் பாக்கியவான்.

தன்னை ஆள்பவன் அனைத்தையும் ஆள்பவன் ஆகிருன்.

பரந்த மனப்பான்மை படைத்தவனே சான்றேருணுகிருன்.

இறைவனுடைய சான்னித்தியத்தில் ஆனந்தம் பொலிகிறது.

ஆயுதத்தின் ஆற்றலைவிட எண்ணத்தின் ஆற்றல் மேலானது.

சஞ்சலப்படுவது தீமையை அகற்றுதற்கு உற்ற உபாயம் ஆகாது.

உள்ளன்போடு பணிவிடை பண்ணுபவன் மனத்தெளிவு அடைகிருன்.

உள்ளிருக்கும் பேரானந்தத்தைப் பாமரன் புறவுலகில் தேடியலைகிருன்.

சமயத்தைச் சரியாக அறிந்துகொள்கிறவன் வேற்றுமை உணர்வை வெல்லுகிருன்.

நலன் புரிபவன் வஜ்ராயுதம் போன்று உறுதியான உள்ளம் படைத்தவன் ஆகிருன்.

வேற்றுமையை வளர்ப்பது உலகத்தவர் போக்கு. ஒற்றுமையை வளர்ப்பது சான்றேர் போக்கு.

அக்கம் பக்கத்திலிருப்பவர்களை ஒதுக்கி வைத்துவிட்டுத் தான் மட்டும் தனியனுக நலன் எதையும் பெறமுடியாது.

ரகசியம் பொருள் துறையில் இடம் பெற்றிருக்கலாம். ஆனல் அருள் துறைக்கும் ரகசியத்துக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை.

வானத்தில் பறக்கும் பறவை பறந்ததன் அடையாளம் எதையும் அங்கு விடுவதில்லை. அங்ஙனம் சான்றேர் தாம் வாழும் வாழ்வில் சிந்தனையைச் செலுத்துவதில்லை.

ஒரு மனிதனை வாட்டுகின்ற துன்பத்தில் மற்றவர்கள் பங்குகொள்ளுதற்கு ஏற்ப அதன் வேகம் தணிகிறது. மற்று இன்பமோ பிறர் பங்கு கொள்ளுதற்கு ஏற்ப வளர்கிறது.

# பரமஹம்சர் புகட்டிய
# பெருநெறி விளக்கம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நாமத்தைச் சொல்லி நோயை நீக்கத் தனக்கு இயலும் என்று கிரீஷ்சந்திரகோஷர் இடையிடையே இயம்புவதுண்டு. கிரீஷ்சந்திர கோஷரிடமும் ஏனைய பக்தர்களிடமும் பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: ''அல்ப அறிவு படைத்த மாந்தர்களுக்கிடையில் யோக சித்தியின் நாட்டம் தீவிரமாக உள்ளத்திலே உருவெடுக்கிறது. நோயை நீக்குதல், நியாய மன்றத்தில் தொடுத்துள்ள விவகாரத்தில் வெற்றி பெறுதல், நீர்மேல் நடத்தல்—இவைபோன்ற சித்திகளைப் பெற வேண்டுமென்று உலகத்தவர்கள் ஆசைப்படுகின்றனர். ஆனால் தூய உள்ளம் படைத்த பக்தர்களோ இவை போன்ற சித்திகளில் நாட்டம் கொள்ளுவதில்லை. பகவானிடத்துத் தூய அன்பே தங்களுடைய உள்ளத்தில் யாண்டும் உருவெடுத்தல் வேண்டும் என்று இறைவனிடம் அவர்கள் பிரார்த்திக்கிறார்கள்.''

''ஒருநாள் ஹிருதயன் என்னிடம் இவ்வாறு வேண்டிக் கொண்டான். 'மாமா, தாங்கள் வழிபடும் தேவதை அன்னை பராசக்தியிடம் தங்களுக்கு ஏதாவது யோக சித்தியைக் கொடுத்தருளும்படி பிரார்த்தனை பண்ணுங்கள்' என்றான். அக்காலத்தில் ஒரு குழந்தையின் மனப்பான்மையை நான் படைத்திருந்தேன். ஒருநாள் ஆலயத்திலே அன்னை பராசக்தியின் சன்னிதியிலே ஜபம் பண்ணிக் கொண்டிருந்தபொழுது அன்னை பராசக்தியிடம், 'தாயே, நான் உன்னிடமிருந்து யோக சித்தி ஏதேனும் பெறவேண்டும் என்று பிரார்த்தனை பண்ண வேண்டும் என்று ஹிருதயன் என்னிடம் சொல்லியுள்ளான்' என்று தெரிவித்தேன். அன்னை பராசக்தி அப்பொழுதுகாட்சி ஒன்றை எனக்குக் காட்டியருளினாள். வயது சுமார் நாற்பது படைத்திருந்த இடைத்தர வயதிலிருந்த விலை மாது ஒருத்தி என் முன்னால் தன் முதுகைக் காட்டி அமரலாயினள். அவளுடைய இடை மிகத் தடித்திருந்தது. கறுப்புக் கரையோடு கூடிய ஆடையை அவள் அணிந்திருந்தாள். ஆனால் அவள் மேனி முழுதும் மலம் நிறைந்ததாகத் தென்பட்டது. அக்காட்சியின் வாயிலாக, யோக சித்திகளைப் பெறுவது அவ்விலைமாது கொடுத்த காட்சிக்கு நிகராக அருவருப்புக்குரியது என்பதே அன்னை பராசக்தி எனக்கு வழங்கிய நல்லுபதேசமாகும். அக்கணமே ஹிருதயனிடம் நான் விரைந்தோடினேன். அத்தகைய பொருளற்றதும் பொல்லாததுமாகிய கருத்தை அவன் ஏன் எனக்கு ஊட்டினான் என்று அவனை நான் கடிந்து கொண்டேன். இத்தகைய அருவருப்புக்குரிய காட்சியை அன்னை பராசக்தி எனக்குக் காட்டி அருளியதற்குக் காரணம் அவன்தான் என்று அவனை நான் திரஸ்கரித்தேன்.

''ஏதோ இரண்டொரு யோக சித்துக்களைப் பெற்றுள்ள மாந்தர்க்கு வேண்டியவாறு பேரும் புகழும் வந்து குவிகின்றன. அவர்களில் பலர் குருவின் ஸ்தானத்தைப் பெறுதலில் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றனர். தங்களைத் தெய்விகம் வாய்க்கப் பெற்ற மேலோர் என உலகம் போற்ற வேண்டும் என்னும் நோக்கம் அன்னவர்களுக்கு உண்டு. பலபேரைத் தங்களுடைய சிஷ்யர்களாகவும் பக்தர்களாகவும் அமைத்துக்கொள்ளவேண்டும் என்பது அவர்களுடைய குறிக்கோளாகும். அத்தகைய யோக சித்தன் ஒருவனைப் பார்த்து உலகத்தவர்கள் பகர்வதாவது: 'ஆ! அச்சான்றோருடைய மகிமைதான் என்னே! கணக்கற்ற பேர் அவரை நாடிய வண்ணமாயிருக்கின்றனர். எண்ணிக்கையிலடங்காத பல பேர் அப்பெம்மானைப் பின்பற்றி வருகின்றனர். அவருடைய வீட்டில் தட்டுமுட்டுச் சாமான்கள் வேண்டியவாறு குவிந்திருக்கின்றன. அவரை நாடி வருகிறவர்கள் தாராளமாக அவருக்குத் தட்சணை வழங்குகின்றனர். எண்ணிய மாத்திரத்தில் கணக்கற்ற

பெருக்கு அன்னதானம் பண்ணும் ஆற்றல் அந்த மகானிடம் அமைந்திருக்கிறது.'

"இத்தகைய சுயநலம் படைத்துள்ள சமயாச்சாரியர்களை வேசி ஒருத்தியோடு ஒப்பிடலாம். பணத்துக்காகவும், கீர்த்திக்காகவும், சுக ஜீவனத்திற்காகவும் தன்னுடைய வாழ்வை ஒப்படைப்பதற்கு நிகராகின்றது இச்செயல். உடல், உள்ளம், உயிர் ஆகிய மூன்றும் பரம்பொருளை அடைதற்கென்று மனிதனிடம் அமைந்துள்ள அருமையான கருவிகளாகும். அந்த அரிய கருவிகளை இன்றிருந்து நாளைக்கு அழிந்துபட்டுப் போகும் சிற்றின்பங்களில் விரயம் பண்ணுவது பெரிய தௌர்பாக்கியமாம். மானுடன் ஒருவன் மாது ஒருத்தியைப்பற்றி ஒரு தடவை இயம்பியதாவது : 'ஆ! அவளுக்கு ஏற்ற காலம் வந்திருக்கிறது. செல்வம் அவளிடம் தாண்டவமாடுகிறது. மாளிகை ஒன்றில் அழகிய அறை ஒன்றை அவள் வாடகைக்கு எடுத்திருக்கிருள். அவள் அறையினுள் மிருதுவான மெத்தையோடு கூடிய நாற்காலியும் தரையில் கவர்ச்சிகரமான விரிப்பும் அதன்மீது திண்டு ஒன்றும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. கணக்கற்ற ஆட்வர்களை அவள் வசப்படுத்தியிருக்கிருள். தொடர்ந்து பலபேர் அவளை அணுகிய வண்ணமாயிருக்கின்றனர்.' இதன் உட்கருத்தாவது: அம்மாது இப்பொழுது விலை மாது ஆக மாறி அமைந்திருக்கிருள். அதை முன்னிட்டு அவள் இன்பத்தில் சொக்கிக் கொண்டிருக்கிருள். கொஞ்ச காலத்துக்கு முன்பு ஒரு பிரமுகர் வீட்டில் அவள் வேலைக்காரியாக இருந்தாள். இப்பொழுது விபசாரத்தனத்தில் அவள் ஈடுபட்டிருக்கிருள். இன்றிருந்து நாளை மறைந்துபட்டுப் போகும் பொருளுக்காகத் தன் ஜீவிதத்தையே அவள் பாழ்படுத்திவிட்டாள்!

"நான் சாதனம் புரிந்துவந்த காலத்தில் எத்தனை எத்தனையோ தெய்வீகக் காட்சிகளைக் காணலாயினேன். ஒருதடவை வில்வ மரத்தடியில் நான் தியானம் பண்ணிக் கொண்டிருந்தேன். அப்போது பாபமானது ஒரு மூர்த்தியாக வடிவெடுத்து என் முன்னிலையில் தோன்றி விதவிதமான முறைகளில் என்னை மயக்க முயன்ருன். ஆங்கில ஜவாணுக வடிவெடுத்து அவன் என்முன் தோன்றிணுன். அவன் எனக்குச் செல்வம், போகம், பதவி, விதவிதமான யோகசித்திகள் முதலியன தர முயன்ருன். அன்னை பராசக்தியிடம் நான் பிரார்த்தனை பண்ணினேன். இரகசியமான இரண்டொரு விஷயங்களை நான் இப்பொழுது உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அன்னை பராசக்தி என்முன் காட்சிகொடுத்தாள். 'தாயே, இவனைக் கொன்றுவிடு' என்று அம்பிகையிடம் நான் வேண்டினேன். அப்போது காட்சிகொடுத்த அன்னையின் திவ்விய வடிவம் இப்பொழுதும் என் மனக்கண்ணில் தெளிவுற்று இருந்து வருகிறது. உலகம் முழுதையும் மயக்க வல்ல அழகிய காட்சியாக அது இருந்தது. எனக்கு ஏற்கனவே தெரிந்திருந்த ஒரு சிறுமியின் வடிவெடுத்து அவள் என்முன் தோன்றிணுள். அவளுடைய கண் பார்வை உலகம் முழுதையுமே ஆட்டிவைக்க வல்லதாகத் தென்பட்டது."

பரமஹம்சதேவர் சிறிது நேரம் மௌனமுற்றிருந்தார். அவருடைய முன்னைய அனுபவங்களை மீண்டும் எடுத்து மொழிய ஆரம்பித்தார்: "நான் கண்ட தெய்வீகக் காட்சிகள் கணக்கிலடங்கா. ஆயினும் அவை யாவையும் எடுத்தியம்பும் மனப்பான்மை எனக்கு வருவதில்லை. அவைகளை எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. தெய்வீகம் வாய்ந்த துளசி பத்ரத்துக்கும் காடு மேடுகளில் தென்படுகின்ற புல்லிய பொருமிச்செடி இலைக்கும் இடையே வேற்றுமை ஏதும் எனக்குத் தென்படவில்லை. பேத புத்தி என் அகத்தினின்று அறவே அகன்று போயிற்று. ஒரு தடவை ஆலமரத்தடியில் நான் தியானம் பண்ணிக் கொண்டிருந்தேன். அப்போது முஸல்மான் ஒருவனுடைய காட்சி எனக்குத் தென்பட்டது. அவன் நீண்ட தாடியுடையவனுகத் தென்பட்டான். மட்பாண்டம் ஒன்றில் சமைத்த அன்னத்தை எடுத்துக்கொண்டு அவன் என்னிடம் வந்தான். ஏனைய முஸல்மான்கள் சிலருக்கு அப்பண்டத்திலிருந்த அன்னத்தை எடுத்து ஊட்டிணுன். அதில்

ஒரு சிறு பகுதியை எனக்கும் அவன் எடுத்து ஊட்டினுன். பக்தி பூர்வமாக அவன் வழங்கிய அன்னத்தை நான் அருந்தினேன். அப்பொழுது அன்னே பராசக்தி பாரமார்த்திக உண்மை ஒன்றை எனக்குத் தெளிவுபடுத்தினுள். அனைத்துக்கும் அடிப்படையாயிருக்கும் பொருள் ஒன்று. அந்த ஒரு மூலப் பொருளே எண்ணிறந்த தோற்றங்களையும் வடிவங்களையும் எடுத்திருக்கிறது. சச்சிதானந்தம் ஒன்றே இத்தனைவித வடிவங்களில் இலங்கிக் கொண்டிருக்கிறது. ஜகத்தாகவும் அதில் வசித்துவரும் எண்ணிறந்த ஜீவர்களாகவும் வடிவெடுத்திருப்பது அந்த மூலப்பொருள் ஒன்றேயாம். அன்னமய கோசமாக இலங்கிக் கொண்டிருப்பதும் அந்த ஒரு பொருளேயாம்.

கிரீஷ் சந்திரகோஷரையும் மகேந்திரரையும் ஏனைய பக்தர்களையும் பார்த்துப் பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது: "சாதனங்கள் புரிந்து வந்தபோது ஒரு பாலகனுடைய மனப்பான்மையை நான் படைத்திருந்தேன். அப்போது ஹிருதயன் எனக்கு ஒரு விஷயத்தை எடுத்து இயம்பினுன். 'அன்னை பராசக்தியிடம் ஏதாவது யோக சித்தியைத் தந்தருள வேண்டுமென்று பிரார்த்தனை பண்ணுவீர்களாக' என்று அவன் எனக்குப் புத்திமதி கூறினுன். அக்கணமே அம்பிகையின் சன்னிதானத்தை நான் நாடிக் கோயிலுக்குள்ளே சென்றேன். அக்காலத்தில் நான் படைத்திருந்த மனப்பான்மை ஓர் அலாதிப் போக்குடையதாக இருந்தது. யார் எதைச் சொன்னுலும் அதை அப்படியே கேட்டுக்கொள்ளும் பாங்கு என்னிடத்து அமைந்திருந்தது. பக்கத்தில் யாரும் இல்லாவிட்டால் பயமுறுத்தும் இருள் ஒன்றே எங்கும் சூழ்ந்திருக்கும் காட்சிக்கு இலக்காவேன். ஹிருதயன் எப்போதும் எனக்கருகிலேயே இருந்து வரவேண்டும் என்னும் அவசியம் எனக்குத் தோன்றியது. அவன் பக்கத்தில் இல்லாவிட்டால் நான் செத்துப்போவேன் என்கின்ற உணர்ச்சியும் எனக்கு உண்டாயிற்று. இப்பொழுதும் அம்மனநிலை ஒருவாறு என்னிடத்து அமைந்திருக்கிறது. நான் உங்களோடு உரையாடிக்கொண்டிருக்கின்றபொழுது உள்ளத்தினுள்ளே ஆத்ம போதம் உருவெடுக்கிறது."

பரமஹம்சதேவர் இங்ஙனம் உரையாடிக் கொண்டிருந்தபோது அவருக்கு ஒருவிதப் பரவசநிலை உண்டாயிற்று. காலத்தையும் இடத்தையும் கடந்துள்ள அதீத நிலை ஒன்றில் அவர் லயமாய்ப் போவதாகத் தென்பட்டார். ஆனுல் பெரும் சிரமம் எடுத்துக்கொண்டு அந்நிலையினின்று தம் உள்ளத்தைத் தடுத்து இவ்வையக வாழ்விலேயே ஊன்றி இருக்க முயன்ருர். அப்பரவச நிலையிலிருந்தவாறு பக்தர்களிடம் அவர் இயம்பியதாவது: "நீங்கள் அனைவரும் இங்கே அமர்ந்திருப்பதை நான் காண்கிறேன். ஆனுல் நீங்கள் அனைவரும் சாசுவதமாக இவ்விடத்திலேயே நிலைத்திருப்பதாக நான் உணர்கிறேன். நீங்கள் எப்போது இங்கே வந்தீர்கள் அல்லது எந்த இடத்தைச் சேர்ந்தவர்கள் என்னும் எண்ணம் என்னிடத்து இல்லை."

சிறிது நேரம் பரமஹம்சதேவர் மௌனமுற்றிருந்தார். பிறகு அவரிடத்துச் சிறிது இப்பிரபஞ்ச ஞாபகம் உருவெடுத்து வந்தது. 'கொஞ்சம் தண்ணீர் அருந்துவேன்' என்ருர் அவர். அவருக்கு அடிக்கடி வருகின்ற சமாதி நிலையைக் கலைத்தற்பொருட்டும் இவ்வுலக உணர்வை உறுதிப்படுத்துதல் பொருட்டும் இடையிடையே அவர் இங்ஙனம் பகர்வது உண்டு. பரமஹம்சரோடு பழகியவர்களுக்குத்தாம் அவர் அப்படிப் பகர்ந்ததன் உட்பொருளை உள்ளபடி அறிந்து கொள்ளமுடியும். ஆனுல் கிரீஷ்சந்திர கோஷர் பரமஹம்சதேவரோடு புதியதாகப் பழகியவர். ஆதலால் அவர் அப்படிப் பகர்ந்ததன் உட்பொருளை உள்ளபடி அறிந்து கொள்ள அவருக்கு இயலாது போயிற்று. ஆதலால் பருகுதற்குக் கொஞ்சம் ஜலம் கொண்டுவர அவர் முயன்ருர். கிரீஷ்சந்திரகோஷருடைய எண்ணத்தையும் போக்கையும் பரமஹம்சதேவர் குறிப்பால் அறிந்துகொண்டார். ஆதலால் "ஐயனே, அருந்துவதற்குத் தண்ணீர் வேண்டாம். அது ஒன்றும் இப்பொழுது தேவை இல்லை" என்ருர்.

---

# எந்நாள் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

9-1. கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போல் [மெய்ஞ்ஞான
மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்பது [எந்நாளோ.

மெய்விளக்கு—விவேகம். சூரியன் பூமியினின்று பல்கோடி மைல்களுக்கப்பால் இருக்கிறது. ஆயினும் அதன் வெளிச்சம் உயிர்களனைத்துக்கும் பயன்படுகிறது. சூரியப் பிரகாசத்தின் பெருமை அத்தகையது. இனிக் கைவிளக்கின் பாங்கோ அத்தகையதன்று. இரவிலே நடந்து செல்லும் மானுடன் ஒருவன் கைவிளக்கு ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு போகிறான். சிறிது தூரத்துக்கு அப்பால் இருப்பவைகளை விளக்கிக் காட்ட அவ்விளக்குக்கு இயலாது. அவைகளை விளக்கிக் காட்டவேண்டிய அவசியமும் இல்லை. நடந்து செல்பவனுக்கு இரண்டு மூன்று அடிகளுக்கப்பால் இருப்பவைகளைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. அப்போதைக்கப்போது அடியெடுத்து வைப்பதற்கு அமைந்துள்ள இடத்தின் பாங்கை அச்சிறு விளக்கானது காட்டித் தருமாகில் அவனுக்கு அது போதுமானது. நீண்ட வெளியெங்கும் அனுகூலமானவைகளும் பிரதி கூலமானவைகளும் ஆகிய இடங்கள் பல உள. அவை யாவையும் ஏககாலத்தில் அறிந்துகொள்ள வேண்டிய அவசியம் நடந்து செல்பவனுக்கு இல்லை. இடைஞ்சல்களைத் தவிர்த்தும் அனுகூலமான இடங்களை நன்கு பயன்படுத்தியும் கைவிளக்கைக் கையில் எடுத்துச் செல்பவன் தன்னுடைய நீண்ட பயணத்தை மங்களகரமான முடிவுக்குக் கொண்டு வரக்கூடும்.

அங்ஙனம் பயன்படுகின்ற கைவிளக்குக்கு நிகரானது மனிதன் படைத்திருக்கும் விவேகம். இந்த விவேகம் தெய்விக இயல்பை அடிப்படையாகக் கொண்டது. செய்யத்தக்கது எது தகாதது எது என்பதை விவேகத்தின் துணைகொண்டு மனிதன் அறிந்துகொள்ள வல்லவனாகிறான்.

மனிதன் சென்றடைய வேண்டிய உறுதிப்பொருள் நெடுந்தூரத்துக்கப்பால் இருக்கிறது. தூரத்தை முன்னிட்டு அவன் சளைத்துப் போகலாகாது. சென்றடைவதற்கு அவன் எடுத்துக்கொள்ளும் காலம் அளவையில் அடங்காது. நாட்களாக, மாதங்களாக, ஆண்டுகளாக, யுகங்களாக அது வடிவெடுக்கலாம். காலவரையறையை அவன் கருத்தில் எடுத்துக் கொள்ளலாகாது. ஞானி ஒருவனுக்குக் கணப்பொழுதும் கல்ப காலமும் ஒன்றே. அத்தகைய மனநிலையை ஆத்ம சாதகன் ஒருவன் தன்பால் வரவழைத்துக் கொள்ள வேண்டும். அதற்கிடையில் அப்போதைக்கப்போது அமைகின்ற சூழ்நிலை, சந்தர்ப்பம், வாய்ப்பு ஆகியவைகளைச் சரியாகப் பொருள்படுத்துவதே நல்ல விவேகமாம்.

இயற்கையின் அமைப்பில் சூரிய வெளிச்சம் தெளிவுற்று ஒளிரும் நாட்களும் சூரியனைக் காண முடியாத மப்பு மந்தாரம் நிறைந்த நாட்களும் மாறி மாறி வந்தமைகின்றன. அப்படி மாறியமையும் காலத்தை முன்னிட்டுச் செடி ஒன்றன் வளர்ச்சி தடைப்படுவதில்லை. வளர்தல் என்னும் செயலைச் செடியானது ஓயாது செய்துகொண்டே போகிறது. ஆத்மசாதகன் ஒருவனுடைய மனப்பான்மை அத்தகையதாக இருக்க வேண்டும். எல்லாச் சூழ்நிலைகளிலும் ஊக்கம் குன்றாதவனாக அவன் இருத்தல் வேண்டும். தனக்கேற்பட்டுள்ள கடமைகளைச் சலிப்படையாது செய்து வருதல் வேண்டும். அத்தகைய உறுதிப்பாடும் ஊக்கமும் வடிவெடுத்திருப்பவனே மெய்ஞ்ஞான மெய்விளக்குப் படைத்தவனாகிறான். எந்நாளோ என்னும் கேள்வி ஈண்டு உபசாரத்துக்காக அமைந்திருக்கிறது. பரமனை அடையும் செயல் இப்பொழுது நிகழலாம். அண்மையில் உள்ள எதிர்காலத்தில் நிகழலாம். பல பிறவிகளுக்குப் பிறகு வரும் சேய்மையில் வந்தமையலாம். அப்படி அமையும் காலவரையறையை ஆத்ம சாதகன் கருத்தில் வாங்கிக் கொள்ளலாகாது. 'என் கடன்

இடையறுது முயன்று கொண்டிருப்பது' என்னும் பான்மையில் அவன் உறுதி பெற்றிருத்தல் வேண்டும். அத்தகைய உறுதிப்பாடும் உழைப்பும் ஊக்கமும் ஒன்றுகூடிச் சாதகனைக் குறியின்கண் எடுத்துச் செல்வது நிச்சயம். இதுவே இக்கண்ணியின் உட்கருத்தாம்.

**9-2.** கேடுஇல்பசு பாசம்எல்லாம் கீழ்ப்படவும் தானேமேல்
ஆகும் சுகப்பொருளுக்கு அன்புறுவது எந்நாளோ?

கேடுஇல்-கேடில்லாத, யாண்டும் உள்ள.

முப்பொருள் உண்மை என்பது துவைத மதவாதம். பசு, பதி, பாசம் ஆகிய யாண்டும் எப்பொழுதும் எவ்விடத்தும் இருந்து வருகின்றன என்பது இக்கொள்கையின் கோட்பாடாகும். இம்மூன்று மெய்ப்பொருள்களுள் பசுத் தத்துவமாய் இலங்குவது ஜீவாத்மன். பாசத்தத்துவமாய் இலங்குவது பிரபஞ்சம். ஜீவாத்மன், பிரபஞ்சம் ஆகிய இரண்டுக்கும் ஆதாரமாய் இருப்பது பதி அல்லது மெய்ப்பொருள். ஜீவாத்மனிடத்துப் பதியின் தத்துவமும் பிரபஞ்சத்தின் தத்துவமும் சேர்ந்து அமைந்திருக்கின்றன. மானுடவியக்தியை ஆராய்ந்து பார்த்தால் இவ்வுண்மை வெளியாகும். உடல், உள்ளம் ஆகியவைகள் பிரபஞ்சத் தத்துவம். உட்லிலே வீற்றிருந்துகொண்டு உள்ளத்தைப் பயன்படுத்தும் அறிவுப்பொருள் ஜீவாத்மன். இந்த ஜீவாத்மன் செய்துள்ள வினைக்கேற்ப அவன் கருவியாகக் கையாண்டுவரும் உடலும் உள்ளமும் மேலானவைகளாக அல்லது கீழானவைகளாக வந்தமைகின்றன. உடல் பயனற்றதாகவோ பழுது பட்டோ போகுமாகில் அதைப் புறக்கணித்துவிட்டு மற்றோர் உடலை அந்த ஜீவாத்மன் எடுத்துக்கொள்கின்றான். களைந்துவிட்ட உடலின் வாயிலாக அந்த ஜீவாத்மனுக்கு மரணம். புதிதாக எடுத்துக்கொண்டுள்ள உடலின் வாயிலாக அந்த ஜீவாத்மனுக்கு ஜனனம். இங்ஙனம் ஜீவாத்மன் ஒருவன் தொடர்ந்து ஜனன மரணத்துக்கு ஆளாகி வருகிறான். அங்ஙனம் அமைகின்ற பிறவிப் பெருங்கடலில் நாளடைவில் ஜீவன் ஒருவனுக்குச் சலிப்புத்தட்டுகிறது. அதற்குக் காரணம் இப்பிரபஞ்ச வாழ்வில் தவிர்க்கமுடியாத பாங்கில் அவனுக்கு வந்து வாய்க்கும் துன்பமேயாம். துன்பம் கலவாத இன்பம் இப்பிரபஞ்சத்தில் இல்லை. ஒவ்வொரு செயலிலும் இன்பம், துன்பம் இரண்டும் கலந்தே இருக்கின்றன. ஒரு விதத்தில் இன்பத்தைவிடத் துன்பம் அதிகம். மானுடன் ஒருவன் தினை அளவு இன்பத்தின் பொருட்டுப் பனை அளவு பாடுபட்டாக வேண்டும். இக்காரணத்தை முன்னிட்டே பிரபஞ்ச வாழ்வில் ஜீவாத்மனுக்குப் பற்றுதல் குறைகிறது. அந்நிலை வருகின்றபொழுது அவன் தானாகவே பரமாத்மாவிடம் நாட்டம் கொள்கிறான். பரமாத்மாவிடம் நாட்டம் அதிகரிப்பதற்கேற்பத் துன்பம் நிறைந்த பிரபஞ்ச நாட்டம் குறைகிறது. மேலும் பல பிறவிகளில் ஜீவாத்மன் அனுபவித்து வந்துள்ள துயரமும் தணிகிறது. அதனால்தான் 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு' என்னும் மறைமொழியும் வாய்த்துள்ளது.

பக்தர்கள் அனைவரிடமும் சிறப்பு ஒன்று வெளியாகிறது. அன்னவர்களின் பக்தி ஓங்குவது ஒரு புறமிருக்க பெரிய துன்பங்களுக்கும் அவர்கள் ஆளாகி இருந்திருக்கின்றனர். மற்று, உலகத்தவர் காட்சியில் துன்பமாகத் தென்படுபவைகள் அனைத்தும் பக்தர்களுக்குத் துன்பமாய்த் தென்படுவதில்லை. அப்பர் சுவாமிகளுக்கும் பிரஹலாதனுக்கும் பெரிய பெரிய சோதனைகள் வரலாயின. ஆயினும் அவைகளை அவர்கள் ஒருபொழுதும் பொருள்படுத்தவில்லை.

இதினின்று மக்கள் அனைவருக்கும் செய்தி ஒன்று வெளியாகிறது. 'மானுடா, நீ உலகில் வாழ்ந்திரு. ஆனால் உலகப்பற்றைப் பெருக்காதே.' முள் நிறைந்த வழியில் நடக்கிற ஒருவன் காலில் பாதரட்சை அணிந்துகொள்வதற்கு நிகராகத் தெய்வப்பற்று மனிதனிடத்து ஓங்கவேண்டும். ஜீவாத்மனுக்கு வந்து வாய்க்கின்ற இவ்வையக வாழ்வில் நிறைந்துள்ள துன்பத்தைத் தவிர்ப்பதற்குக் கடவுள் பற்று ஒன்றே உற்ற உபாயம் என்பது இக்கண்ணியின் கோட்பாடு.

# நமக்கேற்ற முறையில் முன்னேறவேண்டும்

( சுவாமி விவேகானந்தர் )

நம் சமுதாயத்தில் தீமைகள் ஏராளமாக இருக்கின்றன. நம் சமுதாயம் போன்றே மற்றச் சமுதாயங்களிலும் தீமைகள் இருக்கின்றன. தீமைகளைக் குறித்து ஏன் குறை கூறிக்கொண்டிருக்கவேண்டும்? சமுதாயத்தி லுள்ள குறைகளை யார் வேண்டுமென்றாலும் சுலபமாக எடுத்துக் காட்டிவிடலாம். அக் குறைகளைப் போக்குவதற்கான வழிகளைக் கண்டு பிடிப்பவனே சமுதாயத்துக்குரிய நண்பனாவான்.

இந்திய நாட்டில் எப்பொழுதுமே சீர் திருத்தக்காரர்கள் இருந்துகொண்டே இருக் கிறார்கள். இந்தியாவின் வரலாற்றைப் படித்துப் பாருங்கள். சங்கரர், ராமானு ஜர், குருநானக், சைதன்யர், கபீர் போன்ற சீர்திருத்தக்காரர்கள் ஒருவர்பின் ஒருவ ராகத் தோன்றி அரும்பணி செய்திருக்கிறார் கள். அவர்கள் செய்த தொண்டுகள் தொடர்ந்து நிகழ்ந்து வருகின்றன. அவர் கள் யாரையும் நொந்துகொள்ளவில்லை. தற் காலச் சீர்திருத்தக்காரர்கள் சமுதாயத்தைக் குறை கூறிக்கொண்டே இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இவர்களைப்போல் குறை கூறவில்லை. அவர்கள் வாயிலிருந்து ஆசீர் வாதங்களே சதா வந்துகொண்டிருந்தன. நம்முடைய இயல்புக்கேற்றவாறுதான் நாம் முன்னேற்றம் அடைவோம். மற்றநாட்ட வர் நமக்குக் காட்டும் புதிய வழிகளில் நம் நாட்டைச் சீர்திருத்துவது இயலாது. அப்ப டிச் செய்வது வெறும் வீண்முயற்சியாகும். மற்ற நாட்டவர்களுடைய ஸ்தாபனங் களைப் பற்றி நான் குறை கூறவில்லை. அவைகள் அவர்களுக்கு ஏற்றவை. ஆனால் அவைகள் நமக்கு உகந்தவைகள் அல்ல. அவர்களுக்கு நல்லவையாக இருப்பவை நமக்குக் கேடானவையாக இருக்கும். இதை நாம் முதலில் கற்றுக்கொள்ளுதல் வேண் டும். அவர்களுடைய விஞ்ஞான ஆராய்ச்சி களுக்கும், அவர்களின் ஸ்தாபனங்களுக்கும், அவர்களின் பாரம்பரியத்துக்கும் ஏற்ப அவர்கள் இன்றைய நிலையை அடைந்திருக் கின்றனர். நாம் நம்முடைய பாரம்பரியத் துக்கும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நாம் செய்து வரும் கர்ம பலன்களுக்கும் ஏற்ற வகையில் முன்னேற முயலவேண்டும். நாம் யாண்டும் நமக்கேற்ற வழியிலேயே காரியங்களைச் செய்யவேண்டும்.

இந்திய நாட்டின் முன்னேற்றத்திற்காக உழைத்து வருபவர்களில் ஒருவன் என்கின்ற முறையில் நான் உங்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகின்றேன். இந்தியா ஆன்மீகத்துறை யில் அன்றி வேறு முறையில் முன்னேற்றம் அடையமுடியாது. ஆன்மீகமே இந்தியாவின் உயிர்நாடியாகும். ஆன்மீகம் இந்தியாவை விட்டு மறையுமானால் இந்தியா அழிந்து போகும். ஆகையால் இந்தியாவின் அபிவிருத் திக்காக நிகழும் ஒவ்வொருசெயலும் முதலில் சமய எழுச்சியை உண்டாக்குவதாக இருக்க வேண்டும். இந்தியாவில் சமுதாய அரசியல் கருத்துக்களைப்பரப்புவதற்கு முன்பு இந்திய நாட்டைப் பாரமார்த்திகக் கருத்தில் ஊறிப் போகும்படி செய்யுங்கள். துறவும் தொண் டுமேஇந்தியாவின் தேசியலட்சியங்களாகும். இந்தியாவைத் துறவிலும், தொண்டிலும் ஆழ்ந்துபோகும்படி செய்யுங்கள். துறவை யும் தொண்டையும் பேணிப் பாதுகாத்துத் தியாகிகளாகவும் பணிவிடை புரிபவர்களா கவும் இந்தியர்கள் தங்களை ஆக்கிக்கொள்ளு தல்வேண்டும். தியாகத்துக்கும் சேவைக்கும் முதலிடம் தந்து அவைகளிரண்டையும் இந்தியர்கள் வழிபடும்பொழுதுதான் இந்தி யாவில் எல்லாவித முன்னேற்றங்களும் வந்து அமையும். மக்களிடையே தியாக மனப்பான்மையையும், சேவைமனப்பான் மையையும் வளர்த்துவிட்டால் இந்தியாவில் எல்லாவிதமான முன்னேற்றங்களும் தாமா கவே அமைந்துவிடும். இந்தியாவில் சீர்திருத் தம் செய்ய விரும்புபவர்கள் முதலில் தங்க ளிடம் தியாக மனப்பான்மையையும் சேவை மனப்பான்மையையும் வளர்த்துக்கொண்டு மற்றவர்களிடமும் அவற்றை வளர்ப்பார் களாக. இதை முதலில் செய்வார்களாக,

# பராக்கிரமம் படைத்திரு

*(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1981ல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன நவராத்திரி விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவு.)*

அன்னை பராசக்திக்கு ஆயிரம் நாமங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றுள் வீரா, வீரமாதா, வீராட்யா ஆகிய நாமங்கள் கருத்து நிறைந்தவைகள். ''வீர்யமஸி, வீர்யம்மயிதேஹி'' என்பது பிரார்த்தனை. 'இறைவா, தேவியே, நீ வீரியமே வடிவெடுத்திருக்கின்றாய். நீ எனக்கு வீரியத்தை நல்குவாயாக' என்பது இப்பிரார்த்தனையின் பொருள். வீரியம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும். சிலர் முரட்டுத்தனமாகப் பிடிவாதம் செய்வதை வீரியம் என்று கருதுகின்றனர். அது வீரியம் அன்று. வாழ்க்கைத் தத்துவத்தைச் சரியாக அறிந்துகொள்ளவேண்டும். அப்படி அறிந்துகொண்டதற்கேற்பத் தத்துவத்தினின்றும் பிசகாது வாழ்க்கையைக்கொண்டு செலுத்துவது வீரியமாகும்.

இதற்குச் சான்று இயற்கையில் எடுத்துக் கொள்வோம். கப்பல் கடலில் செல்கின்றது. கப்பலில் திசை காட்டிமுள் இருக்கும். கடலில் கொந்தளிப்பு ஏற்பட்டால் கப்பல் சுழன்று தடுமாறும். கப்பல் எவ்வளவு தான் சுழன்றாலும் அதில் அமைந்திருக்கும் திசை காட்டும் முள் வட்திசையையே காட்டிக்கொண்டிருக்கும். கப்பலிலுள்ள திசை காட்டும் முள் எந்நிலையிலும் வடதிசையையே காட்டுவதுபோன்று வீரியம் படைத்தவன் தான் மேற்கொண்டுள்ள நெறியினின்று எந்நிலையலும் பிசகாது இருப்பான். சூழ்நிலை பொருந்தாததாக அமையும்பொழுது மனத்தளாச்சி அடைகின்றவன் வீரன் ஆகான். மனம் வஜ்ராயுதத்துக்கு நிகராக உறுதிபடைததிருக்கும் பொழுதுதான் வீரியவானாவான். 'நான் ஆயுதங்களுள் வஜ்ராயுதமாக இருக்கின்றேன்' என்று கண்ணன் பகர்ந்துள்ளார். வஜ்ராயுதம் எத்தகையது என்பதை அறிந்து கொள்ளவேண்டும். தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் அடிக்கடி போர் மூண்டு விடும். போரில் தேவாகள் தோல்வி அடைவாாகள். இது ஓர் உண்மையை விளக்குகிறது. வாழ்க்கையில் நலம், கேடு இரண்டுக்கும் போர் ஏற்படுகிறது. அப்போரில் கேடு வெல்லும், நலன் பின்னணிக்குப் போய்விடும். ஆகையால் ஒருவன் நல்லவனாகமட்டும்இருந்தால்போதாது; வஜ்ராயுதம் போன்ற மனம் படைத்தவனாகவும் இருக்கவேண்டும். அவன்தான் வாழ்க்கையில் வெற்றி அடைவான். வஜ்ராயுதம் விறகு உடைக்கும் கோடாரிபோன்று உறுதி வாய்ந்தது. முகக்ஷவரம் செய்யும் கத்திபோன்று கூர்மையானது. வஜ்ராயுதம் உறுதியில் கோடாரிக்கும், கூர்மையில் க்ஷவரக்கத்திக்கும் நிகரானது. கூர்மையான உள்ளமும், உறுதியான உள்ளமும் படைத்தவன் வஜ்ராயுதத்துக்கு நிகராகின்றான். வாழ்க்கையில் நாம் பெற்றுவரும் பயிற்சியே உள்ளத்தை உறுதிப்படுத்துகின்றது.

கீதா சாஸ்திரத்துக்குப் பாஷ்யக்காரர்கள் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். கீதை அத்வைதத்தைப் புகட்டுகிறது என்று சங்கரரும், அவருடைய கூட்டத்தாரும் கூறுகின்றனர். கீதை விசிஷ்டாத்வைதத்தைப் புகட்டுகிறது என்று ராமானுஜரும் அவரைப் பின்பற்றுபவர்களும் கூறுகின்றார்கள். கீதை துவைதத்தைப் புகட்டுகிறது என்று மத்வரும் அவரைப் பின்பற்றுபவர்களும் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். ''கோழைத்தனத்தை உதறித் தள்ளிவிட்டுப் பராக்கிரமம் படைத்தவனாக எழுந்திருக்கவேண்டும் என்று கீதைபுகட்டுகின்றது'' என்று விவேகானந்தர் கூறியுள்ளார். எதற்கும் அஞ்சாதநெஞ்சம் படைத்தவன்தான் வாழ்க்கைக்குத் தகுதியுடையவனாகின்றான். கோழை ஒருநாளும் வெற்றி அடையமாட்டான். ஒழுங்குப்பாடே வடிவெடுத்தவனாக இருந்து நேர்மை பிசகாதவனாக நடந்து கொள்ளும் மனப்பாங்கு உடையவன்தான் மக்களுள் மேலோன் ஆகின்றான்.

அன்னை பராசக்தி பராக்கிரமமே வடிவெடுத்தவளாக இருக்கின்றாள். ஆகையால்

அவள்'வீரா' என்று அழைக்கப்படுகின்றாள். ஆலயத்திற்குச் சென்று வெறுமனே கை கூப்பி வணங்கிவிட்டு வருவது வழிபாடா காது. நேர்மையைவிட்டுப்பிசகாது நற்செயல் செய்வதில் உறுதியோடும் தீவிரமாகவும் ஈடுபடவேண்டும். வீரமே வடிவெடுத்திருந்து செயல்புரிவது அம்பிகைக்கு உரிய சிறந்த வழிபாடாகும். இயற்கையன்னை தகுதியற்றதை ஒதுக்கித் தள்ளுகின்றாள்; தகுதி வாய்ந்ததைத் தனக்குரியதாக எடுத்துக் கொள்கின்றாள். தர்மத்தினின்றும் பிசகாதிருக்கவேண்டும். சத்தியத்தினின்றும் பிசகாதிருக்கவேண்டும். பராக்கிரமத்தினின்றும் பிசகாதிருக்கவேண்டும். பக்தர்கள் யாவரும் வீரர்களாக இருந்திருக்கின்றார்கள். வீரத்தன்மையைப் பக்தியின் மூலம் விளக்கியிருக்கின்றார்கள். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். திருநாவுக்கரசர் சமண மதத்திலிருந்து சைவ மதத்திற்கு மாறியதைக் கேள்வியுற்ற அரசன் சினமடைந்தான். நாவுக்கரசரை அழைத்துவரத் தன்னுடைய ஆட்களை ஏவினான். அரசனுடைய ஆட்கள் வந்து நாவுக்கரசரை அழைத்தபொழுது அவர் 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று பதில் கூறினார். ஆட்கள், 'நாங்கள் அரசனுடைய ஆணையின்படி உம்மை வந்து அழைக்கின்றோம். எனவே, நாங்கள் கூறுவதற்கு நீங்கள் மறுப்புச் சொல்லக்கூடாது. அரசருடைய ஆணையை மீறினால் மரண தண்டனைதான் கிடைக்கும்' என்றனர். அதற்கு நாவுக்கரசர், 'நமனையஞ்சோம்' என்று கூறினார். 'அரசன் உம்மை நரகவேதனைக்கு உட்படுத்துவான்' என்று வீரர்கள் கூறினார்கள். அதற்கு அவர் 'நரகத்திலிடர்ப்படோம்' என்றார். 'நீ ஒரு கபடன்' என்றார்கள் அவர்கள். அதற்கு 'நடலையில்லோம்' என்றார் நாவுக்கரசர். 'அரசனுடைய ஆணையை மீறினால் உனக்கு யார் பாதுகாப்புக் கொடுப்பார்கள்?' என்று வீரர்கள் கேட்டார்கள். அதற்கு 'ஏமாப்போம்' என்று அவர் பதில் கூறினார். 'கட்டித் தூக்கிக்கொண்டு போய்விடுவோம்' என்றார்கள். அதற்குப் 'பிணியறியோம்' என்றார். 'எங்களுக்கு நீ கட்டுப்படுவாயா? இல்லையா?' என்றார்கள். 'பணிவோமல்லோம்' என்றார். 'உன் தலைவிதி தீராத கஷ்டத்திற்கு ஆளாகப் போகின்றாய்' என்றார்கள். 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்றார். இது வீர வழிபாடு ஆகும்.

பிரஹலாதன் மிகுந்த துன்பத்திற்கு ஆளானான். அவனுடைய தந்தை அவனை மிகுந்த சித்திரவதை பண்ணினான். பிரஹலாதன் எதற்கும் அஞ்சாது, முற்றிலும் தெய்வத்தைச் சார்ந்திருந்தான். அவன் தனக்குத் துன்பம் வந்த பொழுதெல்லாம் தெய்வம் தன்னோடு விளையாடுவதாகப் பொருள்படுத்தினான். நமக்குத் துன்பம் வந்தால், அதை நாம் துன்பமாகப் பொருள்படுத்துகின்றோம். ஆனால் வீரனொருவன் தனக்கு வரும் துன்பத்தை விளையாட்டாகக் கருதுகின்றான். பிரஹலாதன் தனக்கு வந்த துன்பங்களை மகிழ்ச்சியோடு ஏற்று, அதை இறைவனுடைய விளையாட்டாகப் பொருள்படுத்தினான். அதற்கு மேலும் அவனுடைய வீரத்தன்மையை விளக்குவதற்கு, மற்றொரு நிகழ்ச்சியுள்ளது. ஸ்ரீமந் நாராயணன் பிரஹலாதனுக்குத் தரிசனம் கொடுத்தார். தரிசனத்திற்குப் பின்பு பிரஹலாதனை வரமொன்று கேட்கச் சொன்னார். பிரஹலாதன் 'தங்களுடைய தரிசனமே போதுமானது; அதற்கு மேல் வரம் ஒன்றும் வேண்டியதில்லை' என்றான். 'தெய்வக்காட்சி பெற்ற உனக்கு வரம் தந்தாகவேண்டும். ஆகவே நீ வரமொன்று கேட்டாக வேண்டும்' என்றார். 'நீங்கள் வரம் கொடுத்தே ஆகவேண்டும் என்றால், எனக்குத் தீமை செய்தவர்களுக்கெல்லாம் நீங்கள் நலமே செய்யவேண்டும்' எனக் கேட்டுக்கொண்டான். இது பிரஹலாதனுடைய வீரத்தைக் காட்டுகின்றது.

இராமன் இலங்கையில் இராவணனை வென்றான். ஆஞ்சநேயன் மூலம், இராவணன் அழிந்ததை இராமன் சீதைக்குத் தெரிவித்தான். ஆஞ்சநேயன் சீதாதேவியைப் பார்த்துக் கேட்டதாவது: "தாயே! உங்களுக்குத் தீமை செய்தவர்களை என்ன செய்ய வேண்டும்?" சீதாதேவி பகர்ந்ததாவது: "எனக்குத் தீமை செய்தவர்கள் வெறும் கருவிகளாக மட்டும் இருந்தார்கள். அவர்

களுக்கு ஒரு தீங்கும் செய்யவேண்டாம்.'' சீதை கஷ்டங்களை அனுபவித்த பிறகும் தனக்கு உபத்திரவம் செய்தவர்களைப் பற்றிப் படைத்திருந்த மனப்பாங்கு வீரத்துக்கு அறிகுறியாகும். உண்மையான பக்தர்களின் பாங்கு அத்தகையதாகும்.

யோகிகள் வீரம் படைத்தவர்கள். பீஷ்மர் சிறந்த யோகியாவார். அவர் யோக நிலையிலிருந்து சிறிதும் பிசகாதவராகவிருந்தார். இறுதிக் காலத்தில் உத்தராயண புண்ணிய காலத்தை எதிர்பார்த்து அம்புப் படுக்கையில் படுத்திருந்தார். இரவு நேரத்தில் அம்புப் படுக்கையில் படுத்திருப்பதற்கிடையில்தியானத்தில் இருந்தார். ஒரு நள்ளிரவில் அவருடைய பாதத்தைத் தொட்டு ஒருவன் கண்ணீர் சிந்தினான். 'பாதத்தின் மீது கண்ணீர் சிந்தியவன் யார்?' என்று கேட்டார். அம்மனிதன் 'ராதேயன்' என்று பதில் கூறினான். '' நீ ராதேயன் அல்லன்; நீ குந்தியின் மகன்'' என்று கூறினார் பீஷ்மர். ''இது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கர்ணன் கேட்டான். ''எனக்கும் விதுரருக்கும் உன்னைப்பற்றிய ரகசியம் நெடு நாளைக்கு முன்பே தெரியும். நாரதர் இந்த ரகசியத்தை வெளியிடக்கூடாது என்று கூறியிருந்தமையால் நாங்கள் அதை மறைத்து வைத்திருந்தோம்'' என்றார் பீஷ்மர். ''நீங்கள் இதுவரையிலும் மறைத்து வைத்திருந்ததுபோன்று மேலும் இந்த ரகசியத்தை நான் சாகும் வரையில் மறைத்து வையுங்கள்'' என்று கர்ணன் கேட்டுக்கொண்டான். கர்ணனுடைய வீர மனப்பான்மையை அறிந்து பீஷ்மர் பகர்ந்ததாவது : '' கர்ணா! நீ இப்பொழுது குந்தியின் மகன் என்பதைத் தெரிவித்துவிட்டால் போர் இதோடு நின்றுவிடும். உன் தம்பிமார்களாகிய பாண்டவர்கள் ஐவரும் உன்னை அரசனாக்குவார்கள். நீ அரசனாவது துரியோதனனுக்கும் சம்மதமாக இருக்கும். உன்னைக் குந்தியின் மைந்தன் என்று வெளியிடுவதற்கு ஒத்துக் கொள்கின்றாயா ?'' என்று பீஷ்மர் கேட்டார். '' நான் துரியோதனனுக்காகப் போர்புரிவேன் என்று வாக்குக் கொடுத்துள்ளேன். அவ் வாக்கினின்றும் நான் பிசகக்கூடாது. நான் சாகும் வரையில் துரியோதனனுக்காகப் போர் செய்தே தீருவேன். தயவுசெய்து நான் குந்தியின் மைந்தன் என்ற செய்தியை வெளியிட்டு விடாதீர்கள்'' என்றான் கர்ணன். கர்ணன் இத்தகைய வீரியம் படைத்தவனாக இருந்தான். பீஷ்மர் பாண்டவர்களை எதிர்த்துப் போர் புரிந்தார். பாண்டவர்கள் வெற்றியடைய அவர்களுக்கு அனுக்கிரகம்செய்தார்;போரில் தோல்வி அடைந்தார்; துரியோதனனுக்கு உதவி புரிந்ததற்கிடையில் அவர் அவனுக்கு எச்சரிக்கை செய்ததாவது: ''துரியோதனா, நீ கேட்டுக்கொள்கின்றபடி உனக்கு நான் சேனாதிபதியாகவிருந்து உனக்காக நான் போர்புரிவேன். நான் என் ஆற்றல் முழுவதையும் உனக்காகப் பயன்படுத்துகின்றேன். ஆனால் நீ தோல்வி அடைவாய். நீ தர்மத்துக்குப் புறம்பாகச் செல்கின்றாய். இறைவன் திருவருளையும் புறக்கணித்திருக்கின்றாய். ஆகையால் நீ போரில் ஒரு நாளும் வெற்றி அடையமாட்டாய். நீ தோல்வி அடைவாய் என்றாலும் உனக்காக நான் போர் செய்ய ஆயத்தமாக இருக்கிறேன்.'' இங்ஙனம் பீஷ்மர் பகர்ந்தது அவருடைய வீரியத்தை விளக்குகிறது. பீஷ்மருடைய ஒவ்வொரு செயலும் வீரியம் படைத்ததாகவே இருந்தது. யோகி ஒருவன் எத்தகைய வீரியம் உடையவன் என்பதற்குப் பீஷ்மர் எடுத்துக்காட்டாக இருக்கின்றார்.

பீஷ்மர் அம்புப் படுக்கையிலிருந்தபொழுது அவர் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் விழுந்தது. ''நீங்கள் ஏன் கண்ணீர் சிந்துகின்றீர்கள்?'' என்று கண்ணன் கேட்டார். ''கண்ணா, பரம்பொருளாகிய உன் துணையிருந்தும் பாண்டவர்கள் பட்ட துன்பம் சொல்லும் தரமன்று. உன் அருளுக்குப் பாத்திரமானவர்களின் கதியே இதுவென்றால் மற்றவர்களின் நிலை என்ன என்பதைப் பற்றி எண்ணினேன்; கண்ணீர் வந்தது'' என்றார் பீஷ்மர்.இதுபீஷ்மருடைய வீரியமாகும்.

மகாபாரதப் போர் நடந்துகொண்டிருந்தபொழுது ஒருநாள் கௌரவர்கள்

சூழ்ச்சி செய்து அர்ஜுனனைத் தென் திசைக்கு அழைத்துச் சென்றுவிட்டனர். துரோணர் பத்மவியூகம் என்னும்ஓர் அமைப்பை சேனைகளுக்கிடையில் ஏற்படுத்தினர். அவ்வியூகத்தைத் துளைத்துக்கொண்டு எதிரிகள் அங்குச் செல்ல முடியாது. வியூகத்தை எப்படி உடைப்பது என்பதைப் பற்றிச் சிந்தித்தவர்களாக எல்லாரும் திகைத்துக் கொண்டிருந்தார்கள் அர்ஜுனனுடைய மகன் அபிமன்யு அப்பொழுது பகர்ந்ததாவது: "நான் என் தந்தையிடமிருந்து பத்ம வியூகத்தை உடைத்துக்கொண்டு உள்ளே போவதற்குத் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஆனல் உள்ளிருந்து வெளியே வருவதற்கு இன்னும் எனக்குத் தெரியாது." தர்மர் பகர்ந்ததாவது: "அபிமன்யு! நீ எப்படியாவது பத்ம வியூகத்தை உடைத்துக்கொண்டு உள்ளே நுழை. மற்றவர்கள் பகைவர்களைச் சமாளித்துவிடுவார்கள்." அபிமன்யு பத்ம வியூகத்தை உடைத்துக்கொண்டு நுழைந்தான். அவன் உள்ளே நுழைந்ததும் ஜயத்ரதன் பத்மவியூகத்தை மூடிவிட்டான். இளைஞனை அபிமன்யு அதிரதர்கள் பலபேர்களுக்கிடையில் அகப்பட்டுக்கொண்டான். சிறுவனயிருந்த பொழுதிலும் முகமலர்ச்சியோடு போரிட்டு எதிர்த்தவர்களை எல்லாம் விரட்டி ஓட்டினன். அபிமன்யு எதிரியின் சேன வீரர்கள் பலரை அடித்து வீழ்த்தினன். சேனையிலிருந்த பெரிய வீரர்கள் எல்லாரும் மடிந்தார்கள். ஆனல் அபிமன்யு அஞ்சா வீரனகப் போர்புரிந்தான். கர்ணனும் துரோணச்சாரியரும் தங்களுக்கிடையில் பேசிக்கொண்டார்கள்: 'அபிமன்யு சிறுவனகவிருந்தாலும் வீரனக இருக்கின்றன். அவனை இதே போக்கில் விட்டால் அனைவரையும் அழித்துத் தள்ளிவிடுவான். இவனை ஒழித்தால்தான் மற்றவர்கள் உயிர் பிழைக்கமுடியும். இவனை நேர்வழியில் கொல்லமுடியாது. பொருந்தாத முறையைக் கையாண்டுதான் இவனைக் கொல்ல முடியும்' என்று அவர்கள் வீரியத்திலிருந்து பிசகிவிட ஆரம்பித்தார்கள். கர்ணன் அபிமன்யுவின் பின் பக்கத்திலிருந்து அம்பைத் தொடுத்து அபிமன்யுவின் வில்லை உடைத்தான். வில் அறுபட்டதும் அபிமன்யு திரும்பிப்பார்த்தான். அவ்வேளையில் கிருபரும் துரோணரும் அபிமன்யுவின் சாரதியையும் குதிரையையும் கொன்றார்கள். வில் அறுபட்டவுடன்அபிமன்யு வாள்எடுத்துப் போர் புரிந்தான். கர்ணன் பின்புறமாகவிருந்து வாளை உடைத்துத் தள்ளினன். பிறகு அபிமன்யு சக்கரத்தைஎடுத்துப்போர்புரிந்தான். அதையும் உடைத்துத் தள்ளினர்கள். அபிமன்யுவை ஆயுதமில்லாத வெறும் ஆளாக்கினர்கள். வெறும் கையுடன் அபிமன்யு அவர்களுடன் போரிட்டான். பல அதிரதர்கள் ஒன்று கூடி யுத்த நியதிக்கு மாருகக் கையில் ஆயுதமில்லாத அபிமன்யுவுடன் போர்புரிந்தார்கள். அபிமன்யு நெடுநேரம் அவர்களோடு போர்புரிந்து கீழே விழுந்தான். விழுந்த நிலையிலும் முகமலர்ச்சியுடனும் வீரியத்துடனும் அவன் இருந்தான். அப்பொழுது அவனைப் பார்த்தவர்கள் 'இப்படியும் ஓர் இளைஞன் இருக்க முடியுமா?' என்று திகைப்பும் ஆச்சரியமும் அடைந்தார்கள். அபிமன்யுவின் செயல் வீரியத்துக்கு விளக்கமாகிறது.

வீரியத்தை வளர்க்க வேண்டும். வீரியத்தைப் புறக்கணிக்கின்றவளவு நாம் சாதனத்தில் முன்னேற்றமடைய முடியாது. ஆத்மா பலஹீனனல் அடையப்படுவதன்று என்று உபநிஷதம் கூறுகிறது. உறுதிப்பாடே வடிவெடுத்தவர்களாக இருக்கவேண்டும். அபிமன்யு கையில் ஆயுதமில்லாதிருந்தும் அச்சம் சிறிதுமில்லாதவனக இருந்தான். மனம் தளர்ச்சி அடையாது போரிட்டான். அபிமன்யு போன்று உறுதி படைத்தவர்களாக இருக்கவேண்டும். மரணத்தின்போதுள்ள மனநிலை நம்முடைய தரத்தை விளக்கும். மரணம் நமக்கு ஒரு பாடமாக அமைகின்றது. மரணத்தின் வாயிலாக நாம் திருந்தி அமைந்து வருகின்ரேம். இவ்வுண்மையைப் பலர் அறிந்துகொள்ளாது மரணத்தைக் குறித்து அஞ்சுகின்றனர்.

இரண்டு யானைகள் சண்டையிட்டுக்கொள்கின்றன. பல நாட்கள் அவை சண்டை போடும். மனம் தளராத நிலையிலிருந்து சண்டை போட்டுச் சாகும். யானைக்கும்

சிங்கத்துக்குமிடையில் சண்டை வந்துவிட்டால் அது வீரம் நிறைந்த சண்டையாக இருக்கும். சிங்கம் யானையின் காலில் சிக்கிக் கொண்டால் யானை சிங்கத்தை மிதித்துக் கொன்றுவிடும். யானையின் முதுகின்மேல்சிங்கம் ஏறிக்கொள்ளுமானல் அது யானையைக் கொன்றுவிடும். வனத்தில் வாழும் விலங்குகளுக்கிடையில் சிங்கமும் யானையும் பராக்கிரமம் வாய்ந்த விலங்குகளாக இருந்து வருகின்றன.

சிற்றுயிர்களாகிய தேனீக்களுக்கிடையிலும் வீரியத்தைக் காணலாம். தேனீக் கூட்டம் ஒன்று தேன் இருக்கும் இடத்திற்குச் சென்றது. அக்கூட்டம் மற்றொரு தேனீக் கூட்டத்துடன் சண்டைபோடும் நிலை உருவாகியது. அச்சண்டையில் எந்தத் தேனீக் கூட்டமும் திரும்பிப் போவதாக இல்லை. சண்டைபோட்டுச் சண்டையில் சாவது என்ற நிலையில்தான் இருந்தன. இத்தகைய க்ஷத்திரிய தர்மத்தைத் தேனீக்களுக்கிடையில் காணலாம்.

வாழ்க்கையில் நாம் பல பயிற்சிகள் பெற்று வருகின்றோம். அவற்றுள் ஆபத்துக்கு அஞ்சாதிருந்து பழகுவது பெரிய பயிற்சியாகும். எத்தகைய ஆபத்து வந்தாலும் சாந்தமாக இருந்து பராக்கிரமத்தோடு வீரியமே வடிவெடுத்தவர்களாக இருந்து அந்த ஆபத்தைச் சமாளிக்க வேண்டும். அப்பொழுதுதான் நாம் வாழ்க்கைக்குத் தகுதியுடையவர்களாகின்றோம். பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் விளையாட்டுப் போட்டியில் பங்கு கொள்வார்கள். விளையாட்டின் ஆரம்பத்தில் தோல்வி வந்து விட்டால் விளையாட்டைச் சரியாக விளையாடமாட்டார்கள். அது வீரியத்துக்கு அறிகுறியன்று. விளையாட்டில் தோல்வி வந்தால் விளையாட்டு முடியும் வரையில் இறுதியில் வெற்றி தங்களுடையது என்று மனம் தளராது விளையாடுவார்களானல் அது வீரியத்துக்கு அறிகுறியாகும். அவரவர் தகுதிக்கு ஏற்ற பிரகாரம் வீரியத்தை வளர்ப்பதற்கேற்ற சூழ்நிலையை இயற்கைத் தாய் அமைத்துத் தருகின்றாள். அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்தி நாம் வீர்யத்தை வளர்க்கவேண்டும்.

சிவபெருமானுக்கு வீரேசுவரன் என்பது ஒரு பெயர். கண்ணனுக்கு யோகேசுவரன் என்பது ஒரு பெயர். யோகேசுவரக் கண்ணன் பாரதப்போரில் அசையாத நெஞ்சம் படைத்தவராக இருந்தார். ஆயுதம் தொடாதவராக இருந்து அவ்வளவு பேர்களுடைய அழிவுக்கும் மூலகாரணமாக இருந்தார். வீர்யம் நிறைந்த அவராலேயே கொடுமை வாய்ந்தவர்களை அழித்துத்தள்ளும் செயல் நிகழ்ந்தது. அது அவருடைய பெரிய செயல்.

இறைவன் தாம் கால சொரூபமாக வந்து இவ்வுலகத்தைத்துடைத்துத் தள்ளுவதாகக் கூறியுள்ளார். பீஷ்மர், துரோணர் ஆகிய எல்லாரையும் துடைத்துத் தள்ளும் காலம் வந்திருந்தது. எனவே அவர் அவர்களைத் துடைத்துத் தள்ளினர். சிவனர் வீரேசுவரனுக இருந்து பிரளய காலத்தில் யாவற்றையும் துடைத்துத் தள்ளுகின்றார். ருத்திர மூர்த்தியாகிய சிவனர் தீர்மானம் செய்வாரானல் நொடிப்பொழுதில் இவ்வுலகத்தைத் துடைத்துத் தள்ளி விடுவார். கருணாகரன் என்பதும் அவருக்குப் பெயர். துடைத்துத் தள்ள வேண்டிய காலத்தில் வீரனுக இருந்து அக்காரியத்தைச் செய்யவேண்டும். வீரன் ஒருவன் தான் கருணாகரனுக இருக்கமுடியும். கோழை ஒருவன் கருணாகரனுக இருக்க முடியாது. கருணையையும், வீரியத்தையும் கையாளுகின்றவர் சிவபெருமான். அவரவர்கள் தங்கள் நிலையில் கருணையையும், வீரியத்தையும் கையாளுதல் வேண்டும். வாழ்க்கை என்பது ஒருதரப்பட்ட பயிற்சியைப் பெறுவதாக மட்டும் அமைந்து விடக்கூடாது. பூரண வாழ்க்கையாக அமையுமிடத்து அவ்வாழ்க்கையில் கருணைக்கும் வீரியத்துக்கும் இடம் இருக்கவேண்டும். கருணைகாட்ட வேண்டிய இடத்தில் கருணை காட்டி, வீரத்தைக் கையாள வேண்டிய இடத்தில் வீரத்தை நன்கு கையாள்பவனே சரியான வாழ்க்கைப் பயிற்சி பெறுபவனுகின்றான். கருணையையும் வீரத்தையும் வளர்க்கும் செயல் புரிபவனே அம்பிகை உபாசனை செய்யத் தக்கவனுகின்றான். (தொடரும்)

# கபீர்தாசர் சரிதம்

(68ஆம் பக்கத் தொடர்ச்சி)

பொதுவாக உலக மக்கள் கடவுள் வழிபாட்டுக்கு நேரமில்லை என்று சொல்லுவார்கள். எத்தனையோ வேலைகள் தங்களுக்கு அமைந்திருப்பதாகவும் அவ்வேலைகளுக்கிடையில் கடவுள் வழிபாடு செய்வது சாத்தியப்படுவதில்லை என்றும் கூறுகின்றனர். இக்கூற்று கடவுள் வழிபாட்டில் அவர்களுக்கு நாட்டமில்லை என்பதைக் காட்டுகிறது. கபீரை அவர் தந்தையார் நெசவுத் தொழிலில் அமர்த்தினார். கபீர் நெய்து கொண்டிருப்பதற்கிடையில் அவருடைய மனது ராம தியானத்தில் மூழ்கிவிடும். முழுமனதும் ராம தியானத்தில் லயித்து விடும்பொழுது அவர் கை நெய்வதை நிறுத்திவிடும். கண்களை மூடிக்கொண்டு கபீர் தியானத்தில் அமர்ந்துவிடுவார். கபீர் செய்யும் தொழிலை அவருக்குப் பதில் அவர் இஷ்ட தெய்வமான ராமபிரான் செய்து முடித்துவிடுவார். எனவே கபீர் உலக ஞாபகத்தோடு இருக்கும்பொழுது ஒரு முழம் நெய்வாரானால் உலகத்தை மறந்து ராம தியானத்தில் அவர் இருக்கும் பொழுது ராமபிரான் ஒரு முழம் நெய்வார். ஆக ஒருநாளைக்குக் கபீர் ஒருமுழம், ராமபிரான் ஒருமுழம், ஆக இரண்டுமுழத் துணி நெய்வார்கள். கபீர் தியானத்தில் இருக்கும் பொழுது அவருடைய தாயார் பார்த்து விடுவார். ''நெய்வதை விட்டுத் தூங்குகின்றாயா? காலையிலிருந்து மாலைவரையில் இரண்டு முழம்தான் நெய்வதா?'' என்று கோபித்துக்கொள்வாள். துணி நெய்யச் சொன்னால் தூங்கிக்கொண்டிருக்கின்றான். துணியை எடுததுக்கொண்டுபோய் விற்றுக் கொண்டு வரச்சொன்னால் என்ன செய்கிறான் பார்க்கலாம் என்று துணியை விற்பதற்குக் கபீரை அனுப்பிவைத்தாள். தாயார் உத்தரவுப்படி கபீர் துணியை எடுத்துக் கொண்டு விற்பனைக்குக் கடைத் தெருவிற்குச் சென்றார்.

கடைத் தெருவின் மத்தியில் நின்று கொண்டு துணியை விரித்துக் காட்டி விலை கூறினார். துணியை வாங்குவதற்கு யாரும் முன் வரவில்லை. அன்று பகல் முழுவதும் கபீர் தெருவில் நின்று விலை கூறிக்கொண்டிருந்தார். சூரியன் மறையும் வரையில் துணியை வாங்குவதற்கு யாரும் வராததால் துணியை மடித்துக்கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார். வழியில் ஓர் ஏழைப் பிராம்மணர் கபீர் கையிலிருந்த துணிடைப் பிடுங்கிக்கொண்டு ஓடினார். கபீர் அவரைத் துரத்திக்கொண்டு பின்னால் ஓடினார். கபீர் பிராம்மணரை எட்டிப் பிடித்துவிட்டார். அப்பிராம்மணரிடமிருந்த வஸ்திரத்தைப் பிடுங்கினார். பிராம்மணர் அவ்வஸ்திரத்தை விட்டுக் கொடுக்காமல் அதை விரித்து அங்கிருந்த மக்களிடம் காண்பித்து ''மகாஜனங்களே! இந்த வலைத்துணியைப் பீதாம்பரம் என்று சொல்லுகிறான். இம்மாதிரியான வஸ்திரத்தை நீங்கள் இதற்கு முன் பார்த்திருக்கின்றீர்களா!'' என்று சொல்லிக்கொண்டே பீதாம்பரத்தை இரண்டாகக் கிழித்தார். கபீருக்குக் கோபம் வந்துவிட்டது. ''ஊரார் சொத்துக்கு உனக்கு எதற்காக இவ்வளவு ஆசை'' என்று கோபத்தோடு கூறினார். ''இந்தக் கந்தைத் துணியின் மேல் இவனுக்கு எவ்வளவு ஆசை!'' என்று அப்பிராம்மணர் கூறினார். ''கந்தையானாலும் பட்டுத் துணிதான். எனவே அது போதுமானது'' என்று அப்பிராம்மணரிடமிருந்து அந்தத் துணியை வாங்கிக்கொண்டு கபீர் வீட்டை நோக்கி நடக்கலானார். அவ்அந்தணர் கபீரைப் பின்தொடர்ந்து சென்று ''நான் கிழித்ததை நானே எடுத்துக் கொள்கின்றேன்; விலை சொல்'' என்று கபீரைக் கேட்டார். ''இதற்கு என்ன விலை என்பது எனக்குத் தெரியாது. நான்குபேர் சொல்லுகின்ற விலைக்கு நான் ஒப்புக்கொள்கிறேன்'' என்றார் கபீர். பிராம்மணர் அங்கிருந்தவர்களைக் கூப்பிட்டு, ''பொதுமக்களே, இந்தக் கிழிசல் துணிக்கு என்ன விலை கொடுக்கலாம் என்பதை நீங்களே கூறுங்கள்'' என்றார். அவர்களுள் ஒருவர், ''இத்துணிக்கு ஒரு வரா

கன் தரலாம்'' என்றார். மற்றொருவர் பத்து வராகன் தரலாம் என்றார். மற்றொருவர் நூறுவராகன் தரலாம் என்றார். இப்படி அவர்கள் கூறியதைக்-கேட்ட அப்பிராம்மணர் சுந்தைத் துணிக்குரிய விலை சொல்லாது பத்து வராகன், நூறு வராகன் என்று கூறிப் பரிகாசம் பண்ணுகிறார்கள். இதற்கு விலை இவ்வளவுதான் என்று சில நாணயங்களைக் கபீர் கையில் கொடுத்தார். கபீர் கோபம் கொண்டு அந்நாணயங்களை வீசி எறிந்தார். இங்ஙனம் இவர்கள் இருவரும் ஒருவர் கொடுக்கவும் மற்றவர் மறுக்கவும் செய்வதைப் பார்த்த மக்கள் தங்கள் வேலையைப் பார்ப்பதற்காக அவ்விடத்தை விட்டு அகன்று போய்விட்டார்கள். கடைசியாகப் பிராம்மணர் கபீரை நோக்கிக்கூறியதாவது: ''நான் ஓர் ஏழை; நீர் கிருபை கூர்ந்து பாதி வஸ்திரம் தருவீரானால்நான் அதை எடுத்துக் கொண்டு போய்ப் பிருந்தாவனத்திலுள்ள பெருமாளுக்கு அணிவேன்.அதனால்உனக்குப் புண்ணியம் உண்டாகும். சபரி இராமனுக்குக் கனியையும், குசேலர் கண்ணனுக்கு அவலையும் தந்து பெரும் பேற்றை அடைந்தார்கள். நீ இப்பீதாம்பரத்தைப் பெருமாளுக்குத் தந்து புண்ணியவானாவாயாக'' என்றார். ''இதற்கு உரிய விலை வாங்காமல் நான் கொடுத்து விட்டால் என் தாயும் தந்தையும் என்னை நையப்புடைத்துவிடுவார்கள். ஆதலால் பிராம்மணரே,மன்னியுங்கள்'' என்றார் கபீர். ''கபீர்! தர்மமன்றி ஜீவர்களுக்கு வேறு துணை இல்லை. தர்மம் எப்பொழுதும் தலைகாக்கும். மற்ற இவ்வுலகப் பொருள்கள் எப்பொழுதும் துணையாய் இருக்க மாட்டா. ஏழைப் பிராம்மணனுக்கு நீ இரங்கலாகாதா? தேவர்களுக்காகத் ததீசி மஹரிஷி தம் முதுகெலும்பைத் தந்தார். கர்ணன் தம் உயிரைக் காக்கும் கவசகுண்டலங்களைத் தானம் செய்தாரல்லவா? இந்தச் சிறு துணியை நீ எனக்கு அளிப்பதில் இவ்வளவு தயக்கமா?'' என்று பிராம்மணர் கேட்டார். இல்லறத்துக்குத் தானமும், துறவறத்துக்குத் தவமும், ஸ்திரீகளுக்குக் கற்பும், புருஷர்களுக்கு ஞானமும் முக்கியமல்லவா? இல்லறத் தர்மமாகிய தானம் செய்வதற்குக் கபீர் முன் வந்தார். அப்பிராம்மணர் ''இடைவிடாமல் ராம நாமத்தைக் கூறிப் பிரம்ம ஞானத்தை அடைவாயாக'' என்று கபீரை ஆசீர்வதித்து விட்டுப் பாதித் துணியை வாங்கிக்கொண்டு போய்விட்டார்.

மீதியிருந்த துணியுடன் கபீர் வீட்டை நோக்கிப் புறப்பட்டார். வழியில் இறைவன் பக்கீர் வடிவம் தாங்கிக் கபீர் முன் வந்தார். கபீரைப் பார்த்து ''நீ மிகவும் தயாள குணமுடையவன் என்று பலரும் சொல்லக் கேட்டு நான் உன்னிடம் வந்தேன். எனக்கு வஸ்திரம் இல்லை. உன் கையில் இருக்கும் வஸ்திரத்தைக் கொடுத்து என்னுடைய தேவையைப் பூர்த்தி செய்'' என்றார். அவர் மீது இரக்கம் கொண்ட கபீர் ஜெய சீதாராம் என்று கூறிக்கொண்டு கையிலிருந்த துணியைப் பக்கீருக்குக் கொடுக்கப் போனார். 'ஜெய சீதாராம்' என்றதைக் கேட்டதும் பக்கீருக்குக் கோபம் வந்துவிட்டது.

''கபீர் என்ன சொன்னாய்? நீ ஒரு புரட்சிக்காரன். முஸ்லீம் மதத்துக்குத் துரோகியாக இருக்கின்றாய். உன் கொள்கைகளை உன் பெற்றோரிடம் கூறி உன்னைத் தண்டிக்கப் போகின்றேன்'' என்று கூறிக்கொண்டு கபீர் வீட்டை நோக்கிப் பக்கீர் நடந்தார். ''இதென்ன! பெரிய சங்கடத்தில் வந்து முடிந்து விட்டதே.இந்தப் பக்கீர் பெற்றோர்களிடம் என்னென்னமோ சொல்லி வம்பை வளர்ப்பார் போல் இருக்கிறது. எங்காவது சென்று நான் மறைந்து கொள்வதுதான் நல்லது'' என்று முடிவு செய்து ஒரு பாழடைந்த வீட்டுக்குள் போய்ப் பதுங்கிக்கொண்டார். பகவானுடைய நாமங்களைத் தோத்திரம் செய்து கொண்டே அங்கு இருந்தார். கபீரிடம் துணியை வாங்கிக்கொண்ட அந்தப் பக்கீர் கபீரின் தாயாரிடம் சென்று அந்த வஸ்திரத்தை அந்த அம்மையாருக்குக் காட்டி, ''தாயே, உன் குமாரனுடைய செயலைப்பார். விற்கப் போனவஸ்திரத்தைக் கிழித்து எல்லாருக்கும் தானம் கொடுத்து விட்டான். இதோ பார்! எனக்கும் அந்த வஸ்திரத்தில் ஒரு துண்டை தானமாகக் கொடுத்திருக்கின்றான். அவனுடைய செயலை உன்னிடம் தெரிவிப்பதாக நான் கூறிய

பொழுது அவன் ஒரு பாழடைந்த வீட்டில் போய்ப் பதுங்கிக்கொண்டான்'' என்று கூறினார். ''அவன் பதுங்கியிருக்கும் வீட்டைக் காட்டுவாயா?'' என்று ஜிஜாபீபி கேட்க அந்த அம்மையை அழைத்துக் கொண்டு கபீர் பதுங்கியிருந்த வீட்டுக்குப் பக்கீர் வந்து சேர்ந்தார். கபீர் ஆங்குத் தியானம் செய்துகொண்டிருந்தார். ''பார்த்தீர்களா! உங்களைக் கண்டதும் கண்களைமூடிக்கொண்டான்.'' பக்கீர் கபீரைப் பிடித்து அவர் தாயாரிடம் ஒப்புவித்தார். ஜிஜாபீபி தன் மகனை வஸ்திரத்தைத் தானம் கொடுத்ததற்காகத் தண்டிக்க முற்படும்பொழுது பக்கீர் தம் கையிலிருந்த கழியைக் கொடுத்து உதவினார். ஜிஜாபீபி கழியை வாங்கிக் கோபத்தினால் இரண்டு அடிகள் கழியால் ஓங்கி அடித்தாள். அந்த அடிகள் கபீர் மேல்படாமல் பக்கீராக வந்தவர்மேல் பட்டன. அவர் மிகவும் துடித்துக்கொண்டு கபீரை வாரி எடுத்து மார்புடன் அணைத்துக்கொண்டு கண்ணீர் பெருக்கினார். ஸ்ரீமந் நாராயணன் பக்கீராக வந்த மாய வடிவத்தைக் கலைத்துவிட்டுச் சங்கு சக்கரம் துளசி மாலையுடன் சுயசொருபத்தைக் காட்டினார். ஜிஜாபீபி ஸ்ரீமந் நாராயணனைத் தரிசித்தாள். ஆனந்தம் மேலீட்டினால் ஒன்றும் தோன்றாதவளாய்ப் பிரமை பிடித்தவள்போல் அசைவற்றுத் தன்னை மறந்திருந்தாள். ''முன்பு மாபலியைச் சோதிக்கப்போய் அவன் வாயிலைக்காக்கும் காவல்காரனாய்ப் பலநாள் இருந்தேன். அத்ரி மஹரிஷியின் பத்தினியான அனசூயா தேவியைச் சோதிக்கப் போய் அவளிடம் புத்திரனாய்ச் சில நாட்கள் இருந்தேன். மது கைடபர்கள் போரிலும், இரணியன், இரண்யாக்ஷன், இராவணன் முதலானவர்களோடு செய்த போரிலும், ஆயுதம் எடுக்காமல் பாரதப்போரில் சாரதியாய் இருந்த பொழுதிலும், சிசுபாலனுடைய போரிலும் நான் இத்தகைய சங்கடத்துக்கு உள்ளானதில்லை. கபீரான உன்னைச் சோதிக்க வந்து உன் தாய் கொடுத்த இரண்டு அடியைப் பொறுக்கமாட்டாமல் என்னுடைய மாயா வடிவத்தைக் கலைத்துவிட்டேன். கபீராகிய உன்மஹிமையேமஹிமை'' என்று கூறிக் கபீரை அணைத்துக்கொண்டார். அப்பொழுது ஜிஜாபீபி பகவான் திருவடிகளில் பணிந்து ''ஆண்டவரே, உம்மைக் காணும் பொருட்டு ஊண் உறக்கமின்றிப் பலர் தவம் கிடக்கின்றார்கள். இன்னும் பலர் உன் திருநாமத்தை மறக்காமல் ஜபம் செய்துகொண்டு இருக்கின்றனர். உலகச் சுகபோகங்களை ஒழித்துவிட்டு இழிவான எண்ணங்களையும் அழித்துவிட்டு உம்மை அன்புடன் யாண்டும் பலர் சிந்தனை செய்துகொண்டிருக்கின்றனர். உம்மைக் குறித்து ஆடியும் பாடியும் மெய்ம்மறந்து பலர் துதி செய்கின்றனர். உம்முடைய பெருமைகளைக் கேட்டுக்கொண்டும், உமக்குச் சதா சேவை செய்துகொண்டும் பலர் இருக்கின்றனர். அவர்களுக்கு உம் தரிசனம் கிட்டவில்லை. எனக்கு உம் தரிசனம் தந்தாய்; உம் கருணையே கருணை'' என்று பகவானைத் துதித்தாள்.

பகவான் ஜிஜாபீபியைப் பார்த்து '' நீ ஒரு பாக்கியவதி. உனக்குப் பயந்து எனக்கு அடிவாங்கித் தந்த புண்ணிய புருஷன் யார் என்று உனக்குத் தெரியுமா? அவன் என் அருமையான பக்தன். அவன் பிரம்ம ரிஷி; நீ அடித்த அடி உன் மகன்மீது பட்டதா என்று பார். என் முதுகையும் பார்'' என்று தம் முதுகை ஜிஜாபீபிக்குக் காட்டினார். பகவானின் முதுகின்மேல் இரண்டு அடிகள் பட்டுத் தழும்புகள் ஏற்பட்டிருந்தன. பகவானின் முதுகின் மேலிருந்த தழும்புகளைப் பார்த்தது் ஜிஜாபீபி மூர்ச்சை அடைந்து வீழ்ந்தாள். பகவான் ஜிஜாபீபியை எழுப்பி ''உன்மகன் கபீரை என் சொரூபமாகப் பாவித்து அவனுக்கு நீயும் உன் கணவனும் அன்பான பணிவிடை செய்து என்னை வந்து அடையுங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். அப்பொழுது கபீர் பகவான் பாதங்களில் வீழ்ந்து ''கௌசலையின் மைந்தா, அன்பர்கள் சகாயா, அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகா, சங்கு சக்கர பீதாம்பரதாரி'' என்று துதிசெய்தார். ''கபீர், உனக்குப் பக்தி மேலிடும். நீ தக்க ஆசானைத்தேடி உண்மையை அறிந்துகொள்'' என்று பகவான் கபீரைஆசீர்வதித்தபின் மறைந்துபோனார். (தொடரும்)

# சாதனையும் மன அடக்கமும்

(சுவாமி அசலானந்தர்)

மனிதன் தன்னளவில் நல்லவனுகவே வாழ விரும்புகிருன். ஆயினும், அவன் தன் வசமிழந்து, புலன்களுக்கு அடிமையாகி, அவைகளேத் தம் போக்கில் மிதமிஞ்சிப் போக விட்டு, அதன் விளேவாக முதலில் போகியாகிருன்; போகநிலே தடிப்பேறியபின் ரோகியாகிருன். ஏதோ சில உந்து சக்திகள், புறப்பொருள் கவர்ச்சிகளில் ஆட்படச் செய்வதால் அவன் புறப்பொருள்களே நாடி, அவைகளேப் பெற்று அனுபவிப்பதன் மூலம் இன்பம் பெறுவதாக எண்ணுகிருன். ஆனுல் புறப்பொருள்கள், முதலில் இன்பம் கொடுப்பவை போன்று தோற்றத்தளவில் காட்டி, துன்பத்தையே விளேவிக்கின்றன. புறப்பொருள்களினுல் துன்பமே விளேகிறது என்று அறிந்தாலும், மனதைப் புறப் பொருள்களுக்கு அடிமையாகாமல் தடுக்க முடியாமல் போகிறது. புலன்களே அடக்க எவ்வளவுதான் முயன்ருலும், சுதந்தரத் தன்மையோடு தான் எண்ணும்படி, திட்டமிடும்படி செயலாற்ற முடியாமல் போகிறது. ஆளவந்தவன், ஆளப்படுகிருன்; அடக்கியாள முயன்றவனேத் தோல்வியுறச் செய்து அடங்கி வாழும்படி செய்துவிடுகின் றன இவனிடத்தே உள்ள தளர்வுகள்.

முதலில் எச்சக்திகள் தன்னேத் தளர்வுறச் செய்கின்றன என்பதை அறியவேண்டும். எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணம் ஆசையே—பொருந்தாத ஆசையே. இந்த ஆசையின் வடிவம் பலவகையானது. ஒவ்வொரு மனிதனிடத்தும் அது வெவ்வேறு போக்கில் வடிவெடுத்துச் செயல் புரிகிறது. ஓர் ஆசைக்கு அனுமதி கொடுத்து நிறைவேற்றிவிட்டால் அஃது அத்துடன் அழிவதில்லே. மாருக, அஃது ஆழ்ந்த உள்ளப் பதிவை உண்டாக்கித் தருணம் வாய்க்கும் போதெல்லாம் மீண்டும் மீண்டும் அவ்வாசையை நிறைவேற்ற வேண்டுமென்ற உள்ளக்கிளர்வை உண்டாக்குகிறது. ஆசைக்குத் தீனி போட்டு அதன் பசியை அடக்க இயலாது. எனவே உலக ஆசையைக் கடவுள் ஆசையாக மாற்றி அமைப்பதன் மூலமாகத் தான் ஆசையை வெல்ல முடியும். உலகப் பொருள்களின்மீது சென்று கொண்டிருக்கின்ற மனதை மீட்டு எடுப்பதற்குக் கடவுள் பால் திருப்புதல் வேண்டும். மனது உலகப் பொருள்களிலிருந்து விடுபடுமளவு துன்பத்திலிருந்து விடுபடுகிறது. இதனேயே,

“ யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் ”

என்கிருர் திருவள்ளுவர்.

ஒவ்வொரு புறப்பொருளும், புற விஷயமும் உள்ளத்தைக் கலங்கும்படிச் செய்கின்றன. தீய ஆசைகளேத் தூண்டும், அதாவது மனதை மாசுறச் செய்து மன அமைதியை இழக்கச் செய்கின்ற புறப்பொருள் தொடர்பை அறுத்தெறிய வேண்டும். அப்பொழுதுதான் புதிதாக, வீணுகத் தீய ஆசை எழாது. இவ்வண்ணமே ஸ்ரீ பகவான் கிருஷ்ணன் கூறுகிருர் :

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥

இந்திரியங்களேத் தடுத்து வைப்பவனுக்கு விஷயானுபவங்கள் இல்லே; ஆசை உண்டு. பரமாத்மாவைத் தரிசித்தபின் அவனுடைய ஆசையும் அழிகிறது.

கண், காது, மூக்கு, நா, மேனி என்னும் பொறிகளேப் புறப்பொருள்கள்மீது காணுதல், கேட்டல், மோத்தல், சுவைத்தல், உணர்தல்—இப்படியாகத்தோயும்படி செய்யுங்கால் அவற்ருல் விளேயும் அனுபவங்கள் ஒவ்வொரு முறையும் மனதில் பதிவாகி விடுகின்றன. இப்பதிவுகள் தமக்கொத்த பொருளேக் கண்ட மாத்திரத்தில் அவைகளே அனுபவிக்கவேண்டும் என்ற வேட்கையை உண்டுபண்ணுகின்றன. எனவே, புறப்பொருள்கள் மீது படியும் இந்திரியங்களேத் தடுதது நிறுத்தவேண்டும். சூழ்நிலேக்கேற்ப மனமும் மாறுபடுவதால், பொருந்திய சூழ்நிலேயை அமைத்துக்கொள்ள வேண்டும். சேற்றைப் பூசிக்கொண்டு, பின் அதைப் போக்க முயலுவதைவிடச் சேறு

நம்மீது படாமலிருக்க முயலுவது விவேகம் அன்றோ? எனவே தியார் தொடர்பு, திய பொருள்களின் தொடர்பு, திய விஷயங்களின் தொடர்பு — இவைகளை விஷமென எண்ணிக் கட்டாயமாக விலக்குதல் நல்வாழ்வு வாழ முயல்பவனுக்கு—முன்னேறுவதற்கு முதற்படியாக அமைகிறது.

முன்பே மனதில் பதிவான சம்ஸ்காரங்கள் அவ்வப்பொழுது தலைகாட்டத்தான் செய்யும். அவைகளைத் தடுப்பது எளிதன்று. ஆயினும் மேலும் மேலும் புதிதாகத் திய எண்ணங்களை எண்ணுதலும் பழைய திய எண்ணங்களை வலிவுபடுத்துவதும் கூடாது. விசுவாமித்திரர் போன்ற மாமுனிவர்களும் இந்திரியங்களின் வேகத்தைத் தடுக்க முடியாது காமக்குரோதங்களுக்கு ஆட்பட்டிருக்கிறார்கள். எனவே காவல்காரன் விழிப்புடனிருந்து வீட்டினுள் அனுமதிக்கத் தக்கவர்களை மட்டும் அனுமதிப்பது போன்று, மனதில் உதிக்கும் எண்ணங்களைப் பாகுபடுத்தி நல்லெண்ணங்களை மட்டும் மனதில் இடம் பெற அனுமதிக்கவேண்டும்.

மதியை மயக்குகின்ற பொருள்களுக்கு வலிவு மிக அதிகம். மேலும் இம்மாயப் பொருள்கள், ஈசனின் சக்தியைப் பெற்றிருக்கின்றன. எனவே, தனித்த மனிதன் தன் சொந்த முயற்சியால் மட்டுமே மாயப் பொருள்களின் கவர்ச்சியினின்று விடுபட முடியாது. எனவே, ஸ்ரீ கிருஷ்ணன்:

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥

"குணங்களால் ஆகிய என்னுடைய இந்தத் தேவ மாயையானது உண்மையில் தாண்ட முடியாதது. ஆயினும் யார் என்னையே சரணடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகின்றனர்" என்று கூறுகிறபடி இறைவனிடத்துச் சரண்புகுந்து, அவருடைய அருளைப் பெறத் தீவிரமாகப் பிரார்த்தனையில் ஈடுபடவேண்டும். ஈண்டுத் தீவிரப் பிரார்த்தனை எனக் குறிப்பிட்டது, மன ஒருமைப்பாட்டுடன், முன்னேறியே ஆகவேண்டும், வெற்றியடைந்தே தீரவேண்டும் என்ற எண்ணத்துடன் முயலுதலேயாகும். முமுக்ஷுத்வம் அதாவது முக்தியைப் பெறவேண்டும், பிறப்பு இறப்பினின்று மீளவேண்டும் என்ற வேட்கை இல்லாது போயின், புறத்தில் எத்துணை வசதிகள், நல்வாய்ப்புகள் ஒருவன் அடையப் பெற்றாலும் முன்னேற்றம் காணமுடியாது. ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதாவது: 'ஒருவன் குருவின் அருளைப் பெறலாம், சான்றோர் இணக்கம் வாய்க்கப் பெறலாம், இறைவனின் அருளையும் பெறலாம்; ஆனால் மனதின் அருள், முமுக்ஷுத்வம் இல்லாவிட்டால் முக்திபெற முடியாது!'

பெறுதற்கரிய மானிடப் பிறவி பெற்றுள்ள மனிதன், தான் பிறவித் தளையினின்று விடுபடவேண்டும் என்ற நாட்டம் இல்லாவிட்டால் அவன் விவேகி ஆகமாட்டான். இதனை ஸ்ரீ சங்கரர் விவேக சூடாமணியில் இங்ஙனம் குறிப்பிடுகிறார்:

इतः कोन्वस्ति मूढात्मा यस्तु स्वार्थे प्रमाद्यति ।
दुर्लभं मानुषं देहं प्राप्य तत्रापि पौरुषम् ॥

दुर्लभं – அடைவதற்கரிய, मानुषं देहं–மனித உடலையும், तत्र अपि – அதிலும், पौरुषम् – புருஷத் தன்மையையும், प्राप्य – அடைந்த பின்னும், यः तु – எவன், स्वार्थे – தன் முன்னேற்றத்தில், प्रमाद्यति – தவறுகிறானோ, इतः – இப்படிப்பட்டவனை விட, मूढात्मा – முட்டாள், कः – யாராவது, अस्ति नु–இருக்க முடியுமா?

அடுத்து, புறப்பொருள்களின் கவர்ச்சியிலிருந்து விடுபடமுடியவில்லையே என்று எண்ணித் தளர்ச்சி அடைந்து யாரும் தம் முயற்சியை விட்டுவிடலாகாது. எடுத்த எடுப்பிலேயே யாரும் எதிலும் வெற்றி அடைவதில்லை. மேலும் மோக்ஷ விஷயத்தில், யோக சாதனததில் சிறிது முயன்றாலும் பெரும் பயத்தினின்று காப்பாற்றப் படுகிறான்.

தோல்விகள் இடையிடையே எதிர்ப்படலாம். ஆயினும் திரும்பத்திரும்பத் தளராது முயலவேண்டும். தோல்விகள் சகஜமே. ஒவ்வொரு தோல்வியும் நம்மிடத்துள்ள குறைநிலையை எடுத்துக்காட்டுகிறது. தோல்வியுறும் ஒவ்வொரு தடவையும் அத்தோல்விக்கு உரிய காரணத்தை ஆராய்ந்து பார்த்துக் குறைபாட்டைக் கண்டுபிடித்து அதனைக் களைய முயலவேண்டும். இப்படிச்

செய்துகொண்டே வந்தால், தோல்விகள் குறைந்துகொண்டே வரும். இறுதியில் வெற்றி பெற்றே தீருவோம்.

அடுத்ததாக, ஒருவன் தன்னைத்தானே உயர்த்திக்கொள்ள முடியுமேயன்றி ஏனையோர் முற்றிலும் ஒருவனை உயர்த்திவிட முடியாது. சாஸ்திரங்கள் வழிகாட்டுகின்றன; சாதனைமுறைகளைச் சான்றோர்கள் காட்டி இருக்கின்றார்கள். அவ்வப்பொழுது எவ்வெண்ணம் தகர்க்கப்படவேண்டும் என்பதுபற்றியும் சான்றோர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். இவைகளையெல்லாம் நன்கு பயன்படுத்தி ஒருவன் தானே முயன்றாலன்றி முன்னேறுவது சாத்தியமாகாது.

ஸ்ரீ சங்கரர் கூறுவதாவது:

बन्धमोचनकर्ता तु स्वस्मादन्यो न कश्चन ।

அவித்தை, பந்தத்திலிருந்து விடுதலையடைய முயல்பவனுக்குத் தன்னைத் தவிர (உதவ) வேறு யாரும் இல்லை.

இவ்விதமாகச் சுயப்பிரயத்தனம் பற்றி வலியுறுத்தி இருந்தபோதிலும், தன் சுய முயற்சியால் முக்தியை அடைந்துவிடலாம் என்று அகங்கரித்து முயல்வார் முடிந்த நிலையை அடைவதில்லை. எச்செயலையும் 'நான் செய்கிறேன், அதன் பயனை நானே பெறுவேன்' என்று எண்ணுவார்க்கு வீண் மமதை, அகங்காரம் அமைந்துவிடுகின்றன. 'நான் ஒரு ஞானி' என்ற அகங்காரம் மிகச் சூட்சுமமானது. ஈசனின் அருளின்றி, அனுக்கிரஹம் இன்றி எதுவும் யாருக்கும் வாய்க்காது. எனவே, சாதகன் தன்னை இறைவனின் கருவியெனப் பாவித்து, அடக்கம் உடையவனாய் இருத்தல் வேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்பிகையிடம் பிரார்த்தித்ததாவது: "தாயே! நான் யந்த்ரம், நீ யந்த்ரீ; நான் அறை, நீ அதில் உறைபவள்; நான் ரதம், நீ அதனை ஓட்டும் சாரதி; நான் உறை, நீ அதிலுள்ள உறைவாள்; நீ ஆட்டுவிக்கிறபடி நான் ஆடுகிறேன்; நீ பேசுவிக்கிறபடி பேசுகிறேன்; எல்லாம் நீயே, நானல்லன்." மாயையின் சக்தி ஞானியையும் கலங்கச் செய்துவிடும். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் குருவாகிய தோதாபுரி, மாயாசக்தி தம்மை ஒன்றும் செய்ய இயலாது, அதற்குத் தாம் அடிபணியவேண்டியதில்லையென முதலில் எண்ணியிருநதார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதனை மறுத்தார். ஆயினும் தோதாபுரி ஏற்றுக்கொள்ளவில்லை. இரண்டு நிகழ்ச்சிகளின் மூலம் தோதாபுரி மாயாசக்தியின் வலிவைப் புரிந்துகொண்டார்; அதற்கு அடிபணியவும் செய்தார். அந்நிகழ்ச்சிகளாவன: ஒரு முறை இரவு தீ மூட்டித் தோதாபுரி தியானம் செய்துகொண்டிருந்தார். தியானம் சற்றுக்கலைந்து அமர்ந்திருந்த தருணத்தில் சுருட்டுப் பற்ற வைக்க ஒருவன் வந்து, தோதாபுரி தீமூட்டியிருந்த குண்டத்தின் தீயைப் பயன்படுத்த முயன்றான். அப்போது அச்செயலைத் தடுக்க தோதாபுரி தம்முடைய தடியைத் தூக்கினார். இச்செயலைக் கண்ணுற்ற ஸ்ரீராமகிருஷ்ணர் 'கொல்'லென'ச் சிரித்தார். "அனைத்தையும் பிரம்மமாகக் காணும் தன்மைபோய், தாம் வேறு, சுருட்டுப் பற்றவைப்பவன் வேறு; அக்னிகுண்டத் தீ உயர்ந்தது, சுருட்டு சாமான்யமானது என்ற வகையிலான பேதபுத்தி எங்கிருந்து தோன்றியது?" என்று பரமஹம்சர் கேட்டதும் ஸ்ரீ தோதாபுரி ஒன்றும் பேச இயலாதவராக மௌனமுற்றிருந்தார்.

மற்றுமொரு முறை, கடுமையானவயிற்று நோயால் வருந்திய தோதாபுரி தம்முடைய சரீரத்தைக் கங்கைப் பிரவாகத்தில் மூழ்குடித்துவிட எண்ணிக் கங்கையில் இறங்கினார். ஆனால் அவருடைய முழங்கால் அளவுக்குமேல் கங்கையில் தண்ணீர் இல்லை. கங்கையைக் கடந்து அக்கரை போய்விட்டார். 'என் உடலை உகுத்துவிடக்கூட எனக்குச் சுதந்திரமில்லையா? என்னே மாயையின் சக்தி!' என்று வியந்தார் தோதாபுரி.

எனவே, நிறைநிலை அடைந்துள்ள ஞானிகளும் மனம், சரீரம் இயங்குகின்றவரை மாயாசக்திக்கு அடிபணிந்தே ஆகவேண்டும். அதாவது ஈசனுடைய மாயா சக்தியிடம் அடக்கம் கொண்டவனாக, அகங்காரம் அற்றவனாக இருக்கவேண்டும்.

அடுத்து, புலன்களை அடக்கும் விஷயத்தில், சாதன விஷயத்தில் எத்தனை நாள் இப்போக்கில் செய்து கொண்டிருப்பது

என்ற ஏக்கம், தளர்வு கொள்ளலாகாது. இடையிடின்றி, வாலாயமாகச் சிரத்தை யுடன் செய்துகொண்டே வரவேண்டும். சிலர் சாதனத்தின் ஆரம்ப தசையில் தீவிர மாக இருக்கிறார்கள்; நாளேற நாளேற சாதனத்தில் தீவிரம் குன்றிப்போய் நிதான மாகச் சிரத்தையின்றிச் சாதனம் செய் கின்றனர். அவ்வாறு இருத்தலாகாது. ஆன்மிகச் சாதனத்தில் மனதின் முன்னேற் றம், மனபரிபாகம் அடைந்து வருதல், யாரும் தெளிவாக அறிந்துகொள்ள முடி யாது. மனதோ மிகவும் சூக்ஷ்மமானது. பருப்பொருள் போன்று அதைக் கண்ணுல் பார்க்கமுடியாது. நடுக்கடலில் சென்று கொண்டிருக்கிற கப்பலைக் கடற்கரையி லிருந்து பார்ப்பவனுக்கு அது நின்றுகொண் டிருப்பது போன்று தோற்றமளிக்கும். அதுபோன்றே சாதனத்தில், சாதகன் தான் முன்னேற்றம் அடையவில்லையே என ஏக்கம் கொள்ளக்கூடும். ''ஒன்றைப் பெற்றவனு மல்லேன் பெருதவனுமல்லேன் பெருக்கத் தவித்துளறியே'' என்று தாயுமானவரே கலங்கியுள்ளார். ஆயினும்,

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ॥

'பார்த்தா, அவனுக்கு இம்மையிலோ மறு மையிலோ அழிவென்பதில்லை. நலஞ்செய் வோன் எவனும் நலிவுறுதல் இல்லை' என் கிறார் ஸ்ரீ கிருஷ்ணன். எனவே மனத் தளர்வடையாது தொடர்ந்து சாதனம் செய்து கொண்டே வரவேண்டும். காலக் கிரமத்தில் வாய்ப்பன யாவும் வாய்க்கும். நம்மை எதற்குத் தகுதியாக்குகிறேமோ அதற்கேற்ற பெற்றியைப் பெறத் தடுக்க யாராலும் இயலாது. நம்மை ஆயத்தப் படுத்துவதில்தான் எல்லாம் அமைந்துள் ளன. இலக்ஷியத்தைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கிறேமே ஒழிய, அதை அடையும் விஷயத்தில் முயற்சி என்னவோ குறைவா கத்தான் இருக்கிறது. நமது தோல்விக் கெல்லாம் காரணம், தகுந்த முயற்சி யின்மையே. முயற்சியைச் சரியாகச் செய் யாது, முன்னேற்றமில்லையே என வீணே புலம்புவதால் எதுவும் வாய்த்துவிடாது. எனவே தக்க முயற்சியைத் தீவிரத்தோடு இடைவிடாது செய்தலே இலக்ஷியத்தை விரைவில் அடையத் தக்க உபாயமாகும்.

அடுத்ததாக, ஒவ்வொருவருக்கும் ஒவ் வொரு சுபாவம் உண்டு. அவரவர் தத்தம் சுபாவத்திற்கேற்ப முயல்வதே முறை. மனதை ஒழுங்குப்படுத்தும் முறையோ பல வாக இருக்கின்றது. மனதிலுள்ள மாசுக்கள் அனைத்தையும் போக்குவதே நமது இலக்ஷிய மாகும். இதற்கு வழிவகுக்கின்ற சாதனம் எதுவாயினும், தமக்கு அனுகூலமான ஒன் றைத் தேர்ந்தெடுத்து, அதில் ஆழ்ந்து மூழ்கிவிட வேண்டும். யோக சாதனமாகச் சான்றோர்கள் பயன் கருதாது செய்யும் கர்மம், இறைவனிடத்து அன்பு பூணுதல், மனதை ஒடுக்குதல், நித்தியப் பொருள் பற்றிய ஆராய்ச்சி செய்தல் என்ற வகையி லான சாதனங்களை விதித்துள்ளார்கள். இவைகளில் எதுவும் ஒன்றைவிட ஒன்று மேலானதோ, தாழ்வானதோ இல்லை. மேலும் ஒன்றேடொன்று பிணைந்தே இருக் கின்றன. ஏதேனும் ஒன்றையோ, அல்லது மற்றென்றுடன் கலந்தோ பயிலலாம். அதன் விளைவாக எல்லா உயர்ந்த இயல்புகளும் தாமாகக்கிட்டிவிடும். இயற்கையில் தடுப் புச் சக்தி இருப்பது போன்று அனுகூலமாக இருக்கிற தன்மையும் உண்டு. ஆன்மிகச் சாதனத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ''நாம் பக வானை நோக்கி ஓர் அடியெடுத்து வைத் தால், பகவான் நம்மைநோக்கிப் பத்து அடி எடுத்து வைக்கிறார்'' என்று கூறுவது போன்று நமது சிறிய முயற்சி பெரிய பயனை உண்டுபண்ணுவதால், அடையத் தக்க நிலை அரியதாக இருந்தாலும், பகவா னது அனுக்கிரகத்தால் அடையாமற் போக மாட்டோம்.

தீயசக்திகள் தன்னைத் தாக்காது, அவை களின் பிடியிலிருந்து விடுபட முயல்பவன் தளராமல் முயலவேண்டும். சான்றோர் களின் கூட்டுறவைக் கொண்டு, இறை வனைச் சரண்புகுந்து வாழவேண்டும். அப் படி வாழ்வானேயானல் பிறப்பு இறப்பி லிருந்து விடுபடுவான் என்பதில் ஐயமேதும் இல்லை.

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

"முனி சிரேஷ்டர்களே! கடவுளின் அவதாரங்கள் கணக்கற்றவை. தெய்விகமானவையும் புனிதமானவையுமான அவைகளையெல்லாம் எங்ஙனம் நிறைவாக நான் உங்களுக்குச் சொல்ல வல்லவன் ஆவேன்? மிகப் பெரிய ஆற்றினின்று கணக்கற்ற கிளை நதிகள் பிரிந்து பாய்வன போன்று பரிபூரண சத் புருஷரும் பரமேசுவரனும் ஆகிய பகவானிடத்திருந்து கணக்கற்ற அவதாரங்கள் தோன்றிவந்துள்ளன. இப்பிரபஞ்சத்தின் அதிபதியாகிய பிரஜாபதி, தேவதைகள், முனிவர்கள், மனுக்கள், மற்ற எல்லா ஜீவர்களும் ஸ்ரீ ஹரியினிடத்திருந்து வந்தவர்களே. மேலே சொன்ன அவதாரங்களில் சில கடவுளின் அம்ஸாவதாரங்கள் ஆகும். ஆனால் ஸ்ரீ கிருஷ்ணனே கடவுளின் பூர்ணவதாரமாவார். அவர்பகவானே ஆவார். தேவர்களின் விரோதிகளாகிய ராக்ஷசர்கள் இப் பூவுலகில் கெட்ட இயல்பு படைத்த கீழான மானுடர்களாகப் பிறந்து நல்லவர்களை நலிவடையச் செய்யும்பொழுது ஸ்ரீ ஹரியானவர் மேலே சொன்ன வண்ணம் இப் பூவுலகில் தர்ம சம்ரக்ஷணையின்பொருட்டும் நல்லாரைக் காத்தல் பொருட்டும் தீயவர்களை ஒடுக்குதல் பொருட்டும் அவதரிக்கிறார். பக்தர்கள் பரிசுத்த மனதுடன் காலையும் மாலையும்கடவுளின் நாமகீர்த்தனை பண்ணித் துன்பம் நிறைந்த இப்பிரபஞ்ச பந்தங்களினின்று முக்தி பெறுகிறார்கள். இப்பிரபஞ்சமும் இதில் உள்ள எண்ணற்ற ஜீவர்களும் இதன் எல்லாச் செயல்களும் சிதாகாசத்தில் தோன்றி மறைகிற நிழற் படங்கள் போன்றவை. இந்தப் பிரபஞ்சம் கடவுளின் மாயா சக்தியால் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. ஆகாயத்தில் மிதக்கிற, சஞ்சரிக்கிற மேகக் கூட்டத்தையும் ஆகாயத்தையும் பாகுபடுத்தத் தெரியாது குழந்தைகள் அதை ஆகாயமாகவே கருதுகின்றனர். காற்றில் புழுதி பறந்துகாற்று புழுதியின் நிறத்தை ஏற்றுச் சிவப்பாக, புகைநிறமாக, சாம்பல் நிறமாகத் தோன்றுகிறது. அந்த நிறம் காற்றின் நிறம் அன்று. அது மண் புழுதியின் நிறம் என்று சிந்தித்தால்தான் விளங்கும். இதே போன்று இந்த ஆத்மாவுக்கு நாமம், ரூபம் நிறம், குணம் ஏதும் இல்லாதிருந்தும் அறியாமையினால் மனிதன் வெறும் தோற்றமாகிய அவைகளை யெல்லாம் ஆத்மாவினுடையன என்று கருதுகிறான்.

அக்ஞானிகள் ஜீவாத்மாவின் உன்னத நிலையை அறியமாட்டாதவர்களாய் இந்த ஸ்தூல சரீரத்தில் அது கட்டுப்பட்டதாய்க் கருதுகிறார்கள். அதற்குச் சரீரம் இல்லை. கண்ணுக்கும் அது தெரியாது. ஆகையால் அதை இல்லாததாகவும் சொல்லலாகாது. அதிசூக்ஷ்மமான இப்பொருளை யூகத்தால் தான் உணர, அறிய முடியும். பரமாத்மாவும் ஜீவாத்மாவும் கடலும் அலையும்போலப் பெயரளவில் இரண்டானவையே அன்றி அவை இரண்டு அல்ல. கடல் இன்றி அலை இல்லாதது போன்று பரமாத்மா இன்றி ஜீவாத்மா இல்லை. ஜீவாத்மா இருப்பதால் நாம் பரமாத்மாவைப்பற்றி இப்போது அறியாதிருந்தாலும் அதன் இருப்பை நாம் ஒத்துக்கொண்டாக வேண்டும். பரமாத்மா இன்றி ஜீவாத்மா தோன்றவே முடியாது. ஜீவாத்மா-பரமாத்மா ஐக்கியம், அதன் இரண்டற்ற தன்மை சத்தியமானது. எண்ணற்ற ஜீவ சொரூபங்களில் அது தன்னைத் தோற்றுவித்துக்கொள்கிறது. ஞானம் வரும்பொழுது தன்னைச் சிற்றுயிராகக் கருதி, பாவித்து இன்ப துன்பங்களில் உழல்வதாகத் தன்னைக் குறித்துக் கருதிவந்த அறியாமை எல்லாம் நீங்குகிறது. பரமாத்மாவோடு தனக்குள்ள ஐக்கியத்தை உணர்ந்துகொள்கிறது. அப்போது ஆத்மாவின் இயல்பான, அதன் நிஜசொரூபமான அகண்ட சச்சிதானந்த நிலையில் அது ஒளிர்கிறது. எங்கும் நிறைந்தவராகிய மகாவிஷ்ணுவுக்குக் கர்மமில்லை, கர்மபந்தமில்லை. அதனால் பிறவியும் இல்லை. ஆயினும் அவர் லீலையினால் தன்னிடத்திருந்தே இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறார். அதில் தானும் பல பிறவி

கள் எடுத்து அதி ஆச்சரிய மாயை எல்லாம் செய்கிறார். ஜீவர்கள் அந்த அவதாரங்களைப் பார்த்து அறியமாட்டாதவர்களாய்ச் சாதாரண சிருஷ்டி என்றே கருதுகிறார்கள். சிருஷ்டியில் மிக மிக உயர்ந்தது கடவுளின் அவதாரம். அவர் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய கிருத்தியங்களை விளையாட்டாகச் செய்கிறார். தம் சிருஷ்டிப் பொருளில் தாமே சாட்சியாய், போக்தாவாய் (இன்ப துன்பங்களை, புலன் இன்பங்களை நுகர்பவராய்) இருக்கிறார். அவர் ஹிருஷீகேசன் (இந்திரியங்களுக்குத் தலைவன், புலனடக்கம் நிறைந்தவன், மாயைக்கு யஜமானன்) ஆகையால் புலன் இன்பங்களில் மூழ்கிடாமல் அதினின்றும் அப்பாற்பட்டவராய், நிறைநிலையில் இருக்கிறார்.

கடவுளின் லீலா விநோதங்களையும் அதன் பிரயோஜனங்களையும் அறிவிலி அறியமாட்டான். அந்தப் பரமபிரபு நாடக அரங்கில் நடிக்கிற நடிகன் போன்று இருக்கிறான். அவன் தன் சங்கல்பத்தாலேயே இந்த நாம ரூபங்களை, எல்லையற்ற கதாபாத்திரங்களை எல்லாம் படைத்துத் தன் மகிமையைத் தானே பாடி வருகிறான். பாமரன் பகவானின் ஒப்பற்ற பெருமையை எப்படி அறிவான்? சங்கு சக்கரம் தாங்கிய தர்ம கோப்தாவாகிய அப்பிரபுவினிடத்துப் பேரன்புகொண்டு ஒருமை மனதோடு யார் அவனைத் தியானிக்கிறார்களோ அத்தகைய பக்தர்கள் அவனைப் பற்றிச் சிறிது தெரிந்துகொள்ள முடியும். முனிசிரேஷ்டர்களே, நீங்கள் பாக்கியவான்கள். ஏனென்றால் ஸ்ரீ வாசுதேவரிடத்தில் நீங்கள் பரம பக்தர்களாய் இருக்கிறீர்கள். பரம பக்தர்களுக்கு ஜனன, மரண பயம் இல்லை. அதன் துன்பம் இல்லை. வேதங்களின் சாரம் போன்ற இந்தப் பாகவத சாஸ்திரத்தை உலக நன்மைக்காக வியாசர் இயற்றினார். முனிவர்களில் சிறந்த தன் மகனாகிய சுகதேவருக்கு வியாசர் இப்பாகவதத்தை முதலில் புகட்டினார். பகவானின் லீலா விநோதங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன. பரீக்ஷித்து மகாராஜன் உபவாசமிருந்து கங்கைக் கரையில் பிராணத் தியாகம் பண்ணத் தீர்மானித்து நல்லோர் புடை சூழ வீற்றிருந்தபொழுது இந்தப் பாகவதத்தைச் சுகர் பிரவசனம்பண்ணினார். கலியுக ஆரம்பத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் பக்தர்களும் ஞானிகளும் புடை சூழத் தம் பூலோக லீலைகளை முடித்துக்கொண்டு வைகுண்டம் ஏகினார். அப்போது மீண்டும் அறியாமை இருள் இவ்வுலகைச் சூழ்ந்தது. பகவானும் அவன் லீலைகளும் ஒன்றே. இந்த அஞ்ஞான இருளைப் போக்க இந்தப் பாகவத புராணம் என்கிற சூரியன் தோன்றினான். பரீக்ஷித்து ராஜனை முகாமையாக வைத்து இந்த உத்தம புராணம் உலகுக்கு அறிமுகம் ஆனது, பொது உடைமை ஆக்கப்பட்டது. பரீக்ஷித்துடன் கூட செவிமடுத்த புண்ணியர்களுள் நானும் ஒருவனாய் இருக்கும் பாக்கியம், பேரருள் எனக்கும் கிட்டிற்று. எங்களை மறந்து உலகை மறந்து மனம் ஒருமித்து நாங்கள் அதைக் கேட்டுக்கொண்டிருந்தோம். அப்போது நான் கேட்ட வண்ணமே உங்கள் யாவருக்கும் இப்போது பகர்கிறேன். அதுவும் என் பாக்கியமே.

**அத்தியாயம் 4.**

சூதரின் இனிய மொழிகளைக் கேட்டுக்கொண்டிருந்த சௌனகர் இங்ஙனம் இயம்பினார். அவர் ரிக்வேதத்தைப் பின்பற்றுகிறவர். நீண்ட காலத்தில் செய்து முடிக்கிற தான சத்ரயாகம் செய்ய அங்குக் கூடியிருந்த முனிவர்களுள் அவரே மூத்தவர், முதன்மையானவர். பேசுவதில் வல்லவரான சூதரே, சுகதேவர் அன்று சொன்ன அந்த உத்தம புராணத்தை நீர் எங்களுக்குச் சொல்லுவீராக. பாகவதம் முதன் முதலில் இவ்வுலகுக்கு எங்ஙனம் வெளியாயிற்று? கிருஷ்ண துவைபாயனர் இதை எதற்காக இயற்றினார்? அவருக்கு இந்த எண்ணத்தை ஊட்டியது யார்? இவைகளை எல்லாம் எங்களுக்கு விரிவாகப் பகர்ந்தருளுவீராக. சுகர் யோகிகளுள் சிறந்தவர், சதா பிரம்ம நிஷ்டர். பேதங்களை எல்லாம் கடந்தவர். மாயையினால் அவர் என்றுமே வெல்லப்பட முடியாதவர். ஆனால் மக்களோ, அவரை ஏதும் அறியாதவர், அறிவிலி எனக் கருதினார்கள். அவர் ஒரு சமயம் நிர்வாணியாய் ஒரு குளக்

கரைமேல் நடந்து போய்க்கொண்டிருந் தார். அப்போது அக்குளத்தில் அப்ஸர ஸ்திரீகள் குளித்துக் கொண்டிருந்தார்கள். சுகதேவர் அப்பக்கம் தங்களைக் கடந்து சென்றபோது தேவமாதருக்கு வெட்கமோ, ஆடவன் ஒருவன் நிர்வாணியாய் வருகிறான் என்கிற எண்ணமோ வரவில்லை. ஆனால் தம் மகனைத் தேடிக்கொண்டு அப்பக்கம் வியாசர் வந்தபோது அவர் வயோதிகராக இருந்தும், அம்மாதரசிகளுக்கு வெட்கம் மேலிட்டு ஓடிவந்து தம் தம் துணிகளை உடுத்திக்கொண்டனர். வியாசர் ஆச்சரியமடைந் தார். அந்தத் தேவஸ்திரீகளைப் பார்த்து 'உங்கள் செயல் விநோதமாய் இருக்கிறது. சுகர் கட்டிளங்காளை, சுந்தர சொரூபி, நிர் வாணமாகப் போன போது உங்களுக்கு லஜ்ஜையே ஏற்படவில்லை. வயோதிகன் ஆகிய என்னைக் கண்டதும் உங்களுக்கு நாணம் மிக உண்டாவதற்கு என்ன கார ணம்?' என்று வியாசர் வினவினார். "முனி சிரேஷ்டரே, தங்களுக்குப் பேத உணர்ச்சி, பால் உணர்ச்சி இருக்கிறது. தங்கள் குமா ரரோ எல்லாப் பேத உணர்ச்சிகளையும், பால் வேற்றுமைகளையும் கடந்த நிலையில் உள்ளார்'' என்று அப்ஸரஸ்திரீகள் பதில் அளித்தனர். இந்தச் சம்பவத்தைப் பற்றி நாங்கள் கேட்டிருக்கிறோம். இப்படிப்பட்ட சுகதேவர், புற உலகுக்குச் செவிடு போன் றும், ஊமை போன்றும், பயித்தியம் போன் றும் இருந்தார். இவர் எங்ஙனம் கௌரவர் கள் ராஜ்யத்தில் வனங்களில் திரிந்து ஹஸ் தினபுரம் வந்தடைந்தார்? எது அவரை அங்கே அழைத்து வந்தது? நகர மக்கள் அவரை எங்ஙனம் அறிந்து கொண்டார்கள்? பாண்டவர் பரம்பரையில் வந்த நல்லரசனா கிய பரீக்ஷித்துக்கும் சுகருக்கும் எப்படி முதலில் சம்பாஷணை, தொடர்பு ஏற்பட் டது? ஒரு பசு பால் கறக்கிற நேரத் தளவுக்கு மேல் அவர் எங்கும் தங்க மாட்டார். தெய்வ சான்னித்தியத்துக்கு நிகரான அவர் வருகையால் வீடும் நாடும் புனிதமடையும். இப்படிப்பட்ட சுகதேவர் எங்ஙனம் பாகவத புராணம் முழுவதை யும் ஓர் இடத்தில் இருந்து சொன்னார் என்பது ஆச்சரியமானது. அபிமன்யுவின் குமாரனான பரீக்ஷித்தின் ஆச்சரியமான பிறப்புப்பற்றியும் அவருக்குச் சுகர் பாகவதம் கூறியதைப்பற்றியும் எங்களுக் குச் சூதரே பகர்ந்தருளுவீராக. பாண்ட வர் வம்சத்துக்குப் பெருமையளிப்பவனும் அரசர்களுக்கு அரசனாக விளங்கினவனும் ஆகிய அவ்வரசன் எதன் பொருட்டுச் சகல சௌபாக்கியங்களும் செல்வப்பெருக் கும் நிறைந்த ராஜ்ய லக்ஷ்மியைத் துறந்து விட்டுப் பட்டினி கிடந்து சாகத் தீர்மா னித்துக் கங்கைக் கரைக்கு வந்தான்? உலகில் பெருமை மிக்க அரசனாக விளங்கினான். சன்மானங்களையும் அன்பையும் நாடி அவ னிடம் பலர் வந்தனர். இப்பெருமையைப் பொருட்படுத்தாத மேல் நிலையில் பரீக்ஷித்து இருந்தான். ஆனால் இளமையிலேயே இந் தப் பெருமை மிக்க ராஜ்ய சம்பத்துக்களை எல்லாம் முழு மனதோடு ஏன் பரித் தியாகம் பண்ணினான்? உலகப்பற்று மிக்க வனால் இதை ஒருநாளும் செய்ய முடியாது. ஆனால் கடவுள் பக்தனோ தனக்கென வாழ் வதில்லை. உலக நன்மையின் பொருட்டு அவர்கள் செல்வம், சௌபாக்கியம், அறிவு, ஆற்றல் அனைத்தையும் தேடுகின்றனர். எண்ணற்ற மக்கள் அவனை நேசித்தும் சார்ந்தும் வாழ்ந்து வந்தனர். இவ் ஒப்பற்ற நிலையில் இருந்தும் ஏன் பரீக்ஷித்து ராஜன் உயிர் துறக்க முடிவு செய்தான்? வேதவிற் பன்னரே இவைகளைப்பற்றி எல்லாம் விரி வாகக் கூறுவீராக.''

சூதர் சொன்னார்: "காலச் சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கிறது. மூன்றாவது யுகமாகிய துவாபரயுகம் ஆரம்பித்தபோது மஹாவிஷ்ணுவின் அம்சாவதாரமாகச் சத் தியவதிக்கும் பராசர முனிவருக்கும் மகவாக வியாசர் பிறந்தார். ஒருநாள் முக்காலமும் உணர்ந்த முனியாகிய வியாசர் சரஸ்வதி தீரத்தில் தம் காலைவழிபாட்டை முடித்து விட்டுத் தம் பத்ரிகாச்ரமத்தில் அமைதி யாகத் தியானத்தில் மூழ்கியிருந்தார். அப் பொழுது அக்காலத்திய உலகநிலை அவர் மனதில்பட்டது. காலவெள்ளத்தில் யுக தர்மங்கள் எல்லாம் மாறியும் குழம்பியும்

கலப்பட்டமாகவும் போகும். ஜீவர்கள் தங்கள் சரீர, மனோபலங்களை இழப்பார்கள். கடவுளிடத்துப் முன் போலப் பக்தியும்கூட இருக்காது. அறிவும் மங்கும். பொறுமை இருக்காது. ஆயுளும் சுருங்கிவிடும். அவர்கள் துன்ப துயரங்களுக்கு ஆளாக வேண்டும். நிறை ஞானியாகிய அவர் அந்த யுகத்தின் துவக்கத்திலேயே அதன் எதிர் காலத்தை இங்ஙனம் உணரலானார். தெய்வாதீனமாக ஏற்பட்ட இந்த ஞானக்காட்சியினால் அவருக்குக் கருணையினால் வருத்தமும் பேர் இரக்கமும் உண்டாயிற்று. எல்லா வர்ணத்தாருக்கும் எல்லாப் படித்தரங்களிலும் உள்ள மக்களுக்கும் என்ன செய்தால் நலன்விளையும் என்று யோசித்தார்.

வேதங்கள் கடவுள் தத்துவங்களை விளக்குகின்றன. அவற்றில் மனதைத் திருப்புதல் நலன் விளைவிக்கும். ஆகவே வேதங்களை ரிக், யஜுர், சாம, அதர்வண என நான்காகப் பிரித்தார். இதிஹாசம், புராணம் இரண்டும் பஞ்சம வேதம் எனப்படுகின்றன. பைலர் ரிக் வேதத்தையும்ஜைமினி சாமவேதத்தையும் வைசம்பாயனர் யஜுர் வேதத்தையும் ஸுமந்து அதர்வண வேதத்தையும் ஏற்று அத்யயனம் பண்ணி அவ்வவைகளில் கற்றுத் தேர்ந்தார்கள். என் தந்தையார் லோமஹர்ஷணர் இதிகாச புராணங்களில் வல்லவரானார். அவரவர்க்கு ஏற்ற வேதங்களை மேலும் பாகுபடுத்தித் தங்கள் சிட்டர்களுக்கு இன்னும் எளிதாக்கினார்கள். இங்ஙனம் பரப்பரையாக வந்து ஒவ்வொரு வேதமும் பிரம்மாண்டமான கிளைகளைக் கொண்டவை ஆயின.

அற்ப ஆயுளும் புத்தியும் படைத்த இன்றைய மனிதன் இக்கிளைகளில் ஏதோ ஒன்றைப் படிக்கத்தான் வல்லவனாயிருக்கிறான். க்ஷீண தசையடைந்த மனித வர்க்கம் வேதத்தின் உண்மைகளைப் புரிந்துகொள்ள இயலாது. அவர்களுக்குப் புரியும் வண்ணம் பேர் இரக்கத்தால் கதாரூபமான சரித்திர சம்பவங்களை மகாபாரதக் காவியமாக்கினார். இப்படி எல்லாம் செய்தான பிறகும் கருணைமிக்க அம்முனிவருக்கு மனஅமைதி, திருப்தி ஏற்படவில்லை. புண்ணிய நதியாகிய சரஸ்வதி நதிக்கரையில் அமர்ந்துகொண்டு இங்ஙனம் சிந்திக்கலானார். ''வேத அத்யயனம் நன்கு பக்தியுடன் பண்ணியிருக்கிறேன். சாஸ்திரத்தின் கட்டளைகளைப் பரிபூரணமாகக் கடைப் பிடித்து வாழ்கிறேன். குருவையும், கடவுளையும் முறையே வழிபட்டு வருகிறேன். நான் தர்மத்தை ஒருநாளும் புறக்கணித்ததில்லை. வேதங்களின் சாராம் சத்தை மஹாபாரதத்தில் தெளிவுற எளிதில் கிரகிக்கும்படி காட்டியிருக்கிறேன். நல்வாழ்வு என்பது யாது என்பதை எளிதில் கடைத்தர மனிதனும் புரிந்துகொள்ளலாம். ஆயினும் அந்தோ! ஆத்மானந்தத்தைச் சுவைத்தவனாய், திளைத்தவனாய் இருந்தும் அது திருப்தியைத் தரவில்லையே? பிரம்மத்தில் தன்னில் தானாய் இன்புற்றிருக்கிற பெருநிலைக்கும் என் குறை நிலைக்கும் எவ்வளவு வித்தியாசம்! கடவுளைப்பற்றிச் சாஸ்திரங்களிலும், பாரதத்திலும் விளக்கியிருப்பது எம்மாத்திரம்? சதா பிரம்ம நிஷ்டர்களான பரமஹம்ஸர்களுக்குச் சாஸ்திரங்களினால் என்ன பயன்?'' என்று வியாசர் சிந்தித்துக்கொண்டிருந்தபொழுது தேவர்களும் வழிபடும் முனிவராகிய நாரதர் அவர் முன் வந்தார். பக்தராஜனாகிய நாரதரின் வரவால் வியாசர் மிகவும் மகிழ்ந்து எழுந்து நின்று முறைப்படி வணங்கினார்.

**அத்தியாயம் 5.**

சூதர் சொன்னார்: ''முனிவர்களே, நாரதர் தம் அருகில் அமர்ந்திருந்த வியாசரை நோக்கி இங்ஙனம் இயம்பினார்: 'தாம் மனதாலும் சரீரத்தாலும் நலமுற்றவராக இருந்து வருகிறீரா? சமய சாஸ்திரங்களில் சரியானதையும், பொய்யானதையும் நன்கு பாகுபடுத்தவல்லவராய் இருக்கின்றீரா? தாங்கள் ஆத்ம சாதனங்களைச் சிரமமின்றி செய்து வருகின்றீரா? வேதங்களின் சாரமான மகாபாரதத்தை நீர் இயற்றி இருக்கின்றீர். அது நிறைமனதின் விளைவு ஆதலால், அனைத்தும் தம் விஷயத்தில் நிறைவாகவே இருக்கின்றன. உயர்வற உயர்நிலையில் உள்ள பிரம்மத்தைத் தாம் சாக்ஷாத்கரித்திருக்கிறீர். ஆயினும் உம்முடைய முகத்தில் கவலையின் அறிகுறி, சாயை ஏன் தோன்றுகிறது?''

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-175

*968.* **சுககரீ** ஸுககரீ — சுகத்தை உண்டுபண்ணுபவள்.

வாழ்வில் நலன் அனைத்தும் பொருந்தியிருப்பது சுகம் எனப்படுகிறது. அதற்கு நேர்மாறாக அமைந்தது துக்கம் எனப்படுகிறது. ஒரு சான்றின் மூலம் இந்த இரண்டு கோட்பாடுகளையும் விளக்குவது அவசியம். மீன் ஒன்று நீருக்குள் சுகஜீவனம் பண்ணிக்கொண்டிருக்கிறது. மற்று, நீரினின்று அதை எடுத்து நிலத்தில் போட்டால் அது திணறுகிறது. நிலத்தில் அதற்கு என்ன தான் வசதி செய்து கொடுத்தாலும் அந்தச் சூழ்நிலை அதற்கு ஒத்துக்கொள்ளாது. ஏதேனும் ஒரு விதத்தில் அது மீண்டும் நீரைச் சென்றடைந்தாக வேண்டும். நீர் என்னும் சூழ்நிலை குறைபாடுடையதாக இருக்கலாம். அத்தகைய குறைபாடு ஏதும் இல்லாததாகவும் வசதிகள் அனைத்தும் அமையப் பெற்றதாகவும் நிலம் என்னும் சூழ்நிலை அமையலாம். அப்படி இருந்தாலும் மீனுக்கு அது ஒத்துக்கொள்ளாது. அந்தந்த ஜீவனுடைய வாழ்க்கை முறைக்கேற்ற சூழ்நிலை அதற்கு முற்றிலும் இன்றியமையாதது. அத்தகைய வாய்ப்பைப் பிரபஞ்சம் முழுதிலும் அன்னை பராசக்தி அமைத்து வைத்துள்ளாள். ஆகையினால் உயிர்வகைகள் அனைத்தும் அவற்றிற்கு ஏற்ற சூழ்நிலையில் இனிது வாழ்ந்து வருகின்றன. இக்கோட்பாட்டை அனுசரித்தே அன்னை பராசக்தி சுககரீ என இயம்பப்பெறுகிறாள். அன்னையின் சிருஷ்டியில் உள்ள அனந்தங்கோடி ஜீவர்களும் சுகத்தையே நாடுகின்றன. அதற்குக் காரணம் சுகத்தில் திளைத்திருப்பது உயிர்வகைகளின் மூலநிலையாம்.

பிரபஞ்சத்தினுள் தோன்றி வந்துள்ள உயிர்வகைகள் அனைத்தும் சுகத்தையே நாடுகின்றன எனினும் இப்பிரபஞ்சத்தில் அவைகளுக்கு நிரந்தரமான சுகம் வந்தமைவதில்லை. சுகம், துக்கம் ஆகிய இரண்டும் மாறி மாறி வருவதே இயற்கையின் பாங்காம். மீனின் நிலையை மீண்டும் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்வோம். நிலத்தில் திண்டாடித் திணறிக் கொண்டிருக்கின்ற மீன் ஒன்றுக்கு உலர்ந்த நிலத்துக்குப் பதிலாகச் சதுப்பு நிலம் அகப்பட்டால் அதில் தாற்காலிகமாக ஒரு சிறிதளவு இன்பத்தையும் அமைதியையும் அந்த மீன் பெறுகிறது. பிறகு அத்தகைய சூழ்நிலையில் அகப்பட்ட இன்பம் போதவில்லை என்று அது திணறுகிறது. சதுப்பு நிலத்துக்குப் பதிலாக அந்த மீனின் உடலைப் பாதியளவு நனைப்பதற்கேற்ற ஆழமில்லாத நீர்ப்பகுதி அகப்பட்டால் அந்த மீன் அதில் மேலும் அதிகம் திருப்தி அடைகிறது. சிறிது நேரத்துக்குப் பிறகு அந்தச் சூழ்நிலையும் தனக்குப் போதவில்லை என்று அது திண்டாடுகிறது. அதற்கு மேல் தன் உடல் முழுதையும் நனைப்பதற்கேற்ற நீர்நிலை கிடைத்தால் அந்த மீனுக்குப் புது உயிர் வந்ததற்கு நிகர் இந்தப் புதிய சூழ்நிலை. அதற்கு மேல் இன்னும் ஆழமான நீர்நிலை அகப்பட்டால் மீன் அதை நாடி ஓடுகிறது. ஆழ்கடல் போன்று ஆழ்ந்த நீர்நிலை அகப்பட்டால் அதில் முற்றிலும் திருப்தியடைந்த நிலையில் நீர்வாழும் மச்சம் திருப்தியடைந்திருக்கிறது.

கிட்டத்தட்ட உயிர்கள் அனைத்தும் இந்த நிலையில்தான் பிரபஞ்சத்தில் வாழ்ந்து வருகின்றன. அகப்படுகிற வசதிக்கேற்றவாறு தாற்காலிகமாகச் சிறிது சாந்தமாகவும் பின் சூழ்நிலையைத் திருத்தியமைப்பதற்கான முயற்சியுடனும் எல்லா உயிர்களும் அவ்வவைகளின் போக்கில் சதா முயன்றுகொண்டே இருக்கின்றன. அத்தகைய முயற்சியால் சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிப்பதற்கேற்ற சூழ்நிலையை இயற்கைத் தாய் தந்தருள்கின்றாள். இக்காரணத்தை முன்னிட்டும் அன்னை பராசக்தி சுககரீ எனப்படுகின்றாள்.

அன்னை பராசக்தி இப்பிரபஞ்ச மயமாகக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறாள். பிரபஞ்சத்தின் திட்டமோ துக்க நிவர்த்தி, சுகப்பிராப்தியாம். உயிர்வகைகளனைத்தும் அவற்றின் பரிபாகத்துக்கேற்பச் சுகத்தை நாடுதலும் துக்கத்தை நீக்குதலும் ஆகிய செயல்களில் சதா ஈடுபட்டிருக்கின்றன,

அந்தந்த உயிரின் முன்னேற்றத்துக்கேற்ற வாறு அம் முயற்சியில் வெற்றியும் வாய்க்கிறது. அன்னை பராசக்தியின் சொரூபத்தை அணுகுதற்கேற்ப ஜீவாத்மன் ஒருவனுக்கு நிலைத்த சுகம் வாய்க்கிறது. கடைசியாக அன்னை பராசக்தியில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்பவனுக்கு நிரந்தரமான துக்க நிவர்த்தியும் சுகப்பிராப்தியும் வந்தமைகின்றன. வாழ்வின் குறிக்கோள் இதுவேயாம். சுகத்தை உயிர்களுக்கு நல்குவதற்கேற்ப அன்னை பராசக்தி இப்பெரிய திட்டத்தை நிறைவேற்றி வருகிறாள் என்பது இந்த நாமத்தின் உட்பொருளாகும்.

*969.* सुवेषाढ्या ஸுவேஷாட்யா — மங்களகரமான அலங்காரங்களை உடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அன்னை பராசக்தி தானே சௌந்தர்யமுடையவள். அழகு அன்னைக்குரிய சொரூப லக்ஷணமாம். இயற்கை மயமாக இலங்குகின்ற அன்னை ஆங்காங்கு தன்னுடைய அழகையே வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றாள். அழகில் வசப்படுவது உயிர்களின் பாங்காகும். அழகில் பல படித்தரங்கள் இருக்கின்றன. வடிவத்தில் அழகு, நடை உடை பாவனைகளில் அழகு, செயலில் அழகு, சீலத்தில் அழகு இங்ஙனம் பிரபஞ்சமெங்கும் அழகுமயமாகத் தன்னை விளக்கிக் கொண்டிருக்கின்ற அன்னை பராசக்தியின் மகிமை வெளியாகிறது. இத்தனைவித அழகுகள் தமக்கு இயல்பாயமைந்துள்ளன. அழகை மேலும் புறப்பொருள்களைக் கொண்டு அலங்கரித்துக் கொள்ளுதல் ஒரு முறையாகும். அம்முறையே சிறப்பாக இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது.

அழகிய வடிவுடைய ஜீவாத்மன் ஒருவன் கந்தைத் துணியை அணிந்துகொண்டால் அது அவனுடைய அழகைக் கீழ்நிலைக்குக் கொண்டுவருகிறது. அதற்கு மாறுக நேர்த்தியான உடைகளை அணிந்துகொள்வானுகில் அது அவனுடைய அழகை மிகைப்படுத்துகிறது. இக்கோட்பாட்டை அனுசரித்து அன்னை பராசக்தியை வழிபடுகிறவர்கள் அவளுடைய வடிவத்துக்குக் கவர்ச்சிகரமான ஆடையை அணிவித்து அவளை அலங்கரிக்கவேண்டும். இது பக்தி சாதனத்துக்கு முதற்படியாக வந்தமைகிறது.

ஆண்பாலர்களைவிடப் பெண்பாலர்களுக்கு நகைகளை அணிந்துகொள்ளுதல் ஓர் இன்றியமையாத சமுதாயப் பழக்க வழக்கமாக இருந்துவருகிறது. அது பாராட்டுதற்குரிய நல்ல பழக்கமாம். ஆயினும், வரம்பு கடந்து மக்கள் அதில் கருத்தைச் செலுத்தலாகாது. இத்தகைய இயல்புக்கேற்ப ஒரு வடிவத்தில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் அம்பிகைக்கு ஆபரணங்கள் சூட்டுதல் பொருத்தமானதேயாம். இனி, ஆபரணங்கள் சூட்டுதலிலும் கோட்பாடு ஒன்று உண்டு. நகை அணிந்து மானிட சரீரத்தின் அழகை மிகைப்படுத்தலாம். மற்று, வரம்பு கடந்து ஆபரணங்களை அணிந்து மானிட வடிவத்தை ஆபாசப்படுத்துபவர்களும் உளர். பண்பாட்டில் அழகுணர்ச்சி (Aesthetic taste) என்பது ஒன்று உண்டு. அக்கோட்பாட்டின்படி அளந்தெடுத்தே அளவாக ஆபரணங்களை அணிவித்தல் வேண்டும். இக்காலத்தில் கோயில்கள் பலவற்றில் அம்பிகையின் வடிவத்துக்கு அழகூட்டத் தெரியாதவர்கள் கைவசமுள்ள நகைகளனைத்தையும் அதனிடத்துச் சூட்டி அம்மூர்த்தியின் அழகியல்பைக் கெடுத்துவிடுகிறார்கள். அம்பிகையின் பாங்கிற்கொப்ப நாராயணனுக்கும் அழகன் என்னும் பெயர் வந்துள்ளது. முறையாக அவனை அலங்கரிக்கத் தெரியாதவர்கள் நகை சுமக்கும் வடிவமாக அவன் மீது கைவசமுள்ள நகைகளையெல்லாம் போட்டு அழகனை அழகற்றவனாகச் செய்துவிடுகிறார்கள். பொது மக்களுக்கிடையில் இதையொட்டிய அழகுணர்வு (Aesthetic taste) திருந்தியமைவது முற்றிலும் அவசியமாகிறது.

ஆலயங்களுள் விக்ரஹத்தின் வாயிலாக எழுந்தருளப்பண்ணியிருக்கும் அம்பிகைக்கு நாள்தோறும் பூமாலை தொடுத்து அணிவிப்பது ஆத்ம சாதனங்களுள் ஒன்றாகும். இக்காலத்தில் பூமாலையை வண்ணத்தில் மிகப் பெரியதாக அமைப்பது கலைக்கு அறிகுறி என மக்கள் கருதுகின்றனர். அப்படிக் கருதுவது பெரும் பிழையாம். அந்தந்த வடிவத்

திற்கேற்றவாறு பூமாலைகளை வண்ணத்தில் சிறியவைகளாகவே வைத்திருப்பது அவசியம். பூமாலைகளின் எண்ணிக்கையை ஒரே வேளையில் மிகைப்படுத்துவது மற்றொரு பிழையாகும். அப்படிச் செய்வதன் வாயிலாகப் பூமாலைகள் சுமக்கும் வடிவமாகத் தெய்வத்தின் மூர்த்தியை வழிபடுகிறவர்கள் ஆபாசப்படுத்துகின்றனர். பூமாலையை யாண்டும் வாடாத நிலையில் வைத்திருப்பது முற்றிலும் அவசியம். ஒருநாள் சாத்திய பூமாலை அடுத்த நாள் மூர்த்தியின்மீது இருக்க இடந்தரலாகாது. பூமாலை மனதின் எழிலுக்கும் மகிழ்ச்சிக்கும்அறிகுறியாகிறது. வாடிப்போன மனதைக்கொண்டு அம்பிகையின்வழிபாட்டைப் பண்ணமுடியாது.மனது யாண்டும் எழிலும் இனிமையும் பொருந்தியதாக இருத்தல் வேண்டும். அதற்கு அறிகுறியாக அமைகின்ற மாலையினுடைய பாங்கும் யாண்டும் புத்தம் புதியதாயிருத்தல் அவசியம்.

சந்தனம், குங்குமம் முதலியனவற்றை மேனியின்மீது பூசி அலங்கரிப்பது மற்றொரு முறையாகும். அத்தகைய திரவியங்களைப் பூசுவதாலும் அழகு உணர்வு முன்னணியில் வந்து நிற்கவேண்டும். மேனி முழுதும் திருமண், திருநீறு முதலியனவற்றை மிகைபடப் பூசிஅழகிய மூர்த்தியைப்புலிவேஷமாகவோ பூச்சாண்டி வேஷமாகவோ செய்து விடலாகாது. சுருங்கச் சொல்லுமிடத்துப் பண்புடனும் பாங்குடனும் புறப்பொருள்களைக் கொண்டு அம்பிகையின் மூர்த்தியை அலங்கரிப்பதில் கலைஞானம் முன்னணியில் வந்து நிற்பது அவசியம். கலைகள் அனைத்தையும் வழிபாட்டுக்குப் பயன்படுத்துவது பண்புக்கும் பக்திக்கும் அறிகுறியாம்.

*970.* **சுவாசினி ஸுவாஸிநீ** —கணவனை விட்டுப் பிரியாதவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உலக நடைமுறையில் கணவனில்லாதவள் விதவா எனவும் கணவனோடு கூடியிருப்பவள் சதவா எனவும் அழைக்கப்படுகிறார்கள்.

அன்னை பராசக்தி யாண்டும் சிவனருடைய செம்பாதி வடிவில் இருந்து வருகிறாள். அதை முன்னிட்டே சிவனார் அர்த்த நாரீசுவரன் என அழைக்கப்படுகிறார். மாதொரு பாகனானவன் என்பது அதன் பொருள். சிவனார் செம்பொருள், அழியாதவர். ஆதலால் அவருடைய செம்பாதியாயிருக்கின்ற அன்னையும் யாண்டும் நித்திய வஸ்துவாகவே இருந்து வருகிறாள். மற்று, பிரளய காலத்தில் இவர்கள் இருவரும் இணைபிரியாதிருந்தும் தோற்றத்தில் ஒரு சிறிய வேறுபாடு அமைந்துள்ளது. பிரபஞ்சம் முழுதும் தோற்றத்திலில்லாத நிலையை அடையுங்கால் அந்நிலையில் சக்தியின் பாங்கு எத்தகையது என்னும் கேள்வி எழுகிறது. கோயில்களில் கையாண்டு வரும் கிரியைகளில் ஒன்றே இக்கேள்விக்குத் தக்க விடை தருகிறது. யாண்டும் உண்ணாது, உறங்காது இருக்கிற பொருள் இரவிலே சயனிக்கப் போவதாகச் சடங்கு ஒன்று கோவில்களில் நிகழ்கிறது. அம்பிகையைச் சயனிக்கப் பண்ணுங்கால் சிவனும் சக்தியும் ஒன்றுபடுகிற நிலையில் அன்னை பராசக்தி சயனிக்கின்றாள். அதே விதத்தில் சிவனார் இரவில் உறங்கப் போகின்றபொழுது சக்தியுடன் ஒன்றுபட்ட நிலையில் உறங்குகின்றார். சிவனும் சக்தியும் அபின்னம் என்னும் கோட்பாடு இக்கிரியையின் மூலம் வெளியாகிறது.

அன்னை பராசக்தி யாண்டும் சிவத்துக்கு அபின்னமாய் இருப்பதால் மங்களகரமான மூர்த்தியாக அவள் யாண்டும் இலங்குகின்றாள். உலகத்தவர் வாழ்க்கை முறையை முன்னணியில் வைத்து அன்னை பராசக்திக்கு இந்த நாமம் வழங்கப்பட்டிருக்கிறது. எனினும் தத்துவ பூர்வமாகப் பார்க்குமிடத்து அன்னை பராசக்தி வேறு, சிவனார் வேறு அல்லர். சொரூபத்தில் ஒன்று, விளக்குகின்ற பாங்கில் இரண்டு மூர்த்திகளாக அவர்கள் கருதப்படுகின்றனர். வசதிக்காக அக்னியையும் அதனிடத்து அபின்னமாயிருக்கும் வெப்பத்தையும் வேறுபடுத்திப் பகர்கிறோம். உண்மையில் அக்னியும் அதன் உஷ்ணமும் பிரிக்கப்படமாட்டா. அங்ஙனம் அன்னை பராசக்தி யாண்டும் சிவசொரூபமாக இலங்கி வருகின்றாள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (343)** *ஆலயங்களில் உள்ள பலி பீடத்தின் தாத்பர்யம் என்ன?*

பலிதானம் என்பதன் பொருள் உயிர்களைக் கொல்லுதல் அன்று. தன்னிடத்திலிருக்கும் மேலானதைப் பிறருக்குப் பயன்படும்படி வழங்குவது அல்லது கட்வுள் வழிபாட்டில் பயன்படுத்துவது என்பது தான் அதன் பொருள். கோயிலுக்குள்ளே நுழைந்தவுடன் பலிபீடம் என்னும் இடம் ஒன்று உண்டு. அந்தப் பீடத்தின் முன் ஆடவர்கள் சாஷ்டாங்கமாகவும் பெண்கள் பஞ்சாங்கமாகவும் வழிபடுதல் வேண்டும். அப்படி வழிபடுகின்றபொழுது வழிபடுகின்றவன் தன்னிடத்துள்ள சிறுமைகளை எல்லாம் ஒதுக்கித் தள்ளுவதாகச் சங்கல்பம் பண்ணவேண்டும். தன்னிடத்துள்ள மேன்மைகளை ஓங்குவிப்பதும் பின்பு அவைகளைக் கடவுள் வழிபாட்டுக்கென்றே பயன்படுத்துவதும் வாழ்க்கையின் சிறந்த நோக்கமாகும். வழிபடுகின்றவன் பலிபீடத்தின் முன் வணங்கும்பொழுது அத்தகைய மனப்பான்மையை வரவழைப்பது மிக நன்று. கோயிலுக்குப் போகும் முன் நீராடி உடலைச் சுத்தப்படுத்துவதற்கு ஒப்பாகக் கோயிலுக்குள் நுழைந்தான பிறகு பலி பீடத்தின் முன் வீழ்ந்து வணங்கும்பொழுது மனதைச் சுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும். இதுவே பலி பீடத்தின் நோக்கமாம்.

**கேள்வி: (344)** *மறுபிறவி உண்டென்று இந்து மதம் பகர்கிறது. மனிதனுக்குக் கடவுள் கொடுத்திருப்பது ஒரே ஒரு பிறவிதான் என்று புறமதங்கள் பகர்கின்றன. முரண்படுகின்ற இவ்விரண்டு கோட்பாடுகளுள் எதை ஏற்பது?*

மனிதனுக்கு அமைந்திருப்பது ஒரே ஒரு பிறவி என்றால் அந்த ஒரு பிறவியைக் கடவுள் கொடுத்திருக்கிறார் என்றால் அக்கடவுள் பட்சபாதம் உள்ளவர் எனப் பொருள்படுகிறது. ஏனென்றால் சிலர் அற்பாயுள் படைத்தவர்களாகவும் வேறு சிலர் நீண்ட ஆயுள் படைத்தவர்களாகவும் அமைகின்றனர். கருணாகரக் கடவுளுக்கு இத்தகைய பட்சபாதம் பொருந்தாது. பிறகு சிலர் பிறவியிலிருந்தே அறிவு படைத்த நல்லவர்களாக இருக்கின்றனர். வேறு சிலர் துஷ்டர்களாகவும் கேடே வடிவெடுத்தவர்களாகவும் இருக்கின்றனர். மக்களை இப்படிப் படைப்பதும் கருணையே வடிவெடுத்துள்ள கட்வுளுக்குப் பொருந்தாது.

இனி, ஆத்ம பரிபாகம் அடைவது வாழ்க்கையின் குறிக்கோள் என்றால் அப்பெருநிலையைப் பெறுதற்கு ஒரு பிறவி போதாது. பள்ளிக்கூடத்தில் பாலர் வகுப்பில் துவங்கிக் கல்வி கற்று, படிப்படியாக மேல் நிலைக்குப் போவதற்கு ஒப்பானது பிறவியின் நோக்கம்.

கடவுள் அந்தந்த உயிர்வகைகளை ஒன்றோடொன்று சம்பந்தப்படாத தனிக்கூட்டங்களாகப் படைத்தார் என்பது புறமதக் கொள்கை. அதுமட்டுமன்று. மற்ற உயிர்களை மனிதனுடைய நலனுக்காகவென்றே கடவுள் படைத்திருக்கிறார் என்பதும் புறமதக் கொள்கை. ஆனால் பரம்பொருள் என்னும் ஒரு பேருயிர் அனந்தங்கோடி ஜீவர்களாகத் தோன்றிப் படிப்படியாகப் பல பிறவிகளில் மேல்நிலைக்கு வருகின்றது என்பது இந்துமதக் கோட்பாடாகும். ஆதலால் உயிர் வகைகள் அனைத்திடத்தும் நல்லிணக்கம் கொள்வது கடவுள் வழிபாட்டுக்கு நிகர் என்பது இந்துமதக் கொள்கை. பிறவிகளுள் உச்சநிலையை எட்டியிருப்பது மானுடப் பிறவி. மனிதப்பிறவி வாய்த்தல் அரிது. பரிணமித்துப் பல பிறவிகளின் மூலம் மனிதனுக்கு இந்த வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. மனிதனாகப் பிறந்த பிறகும் முக்திக்குத் தன்னைப் பக்குவப்படுத்தும் வரையில் பிறவிப் பெருங்கடலில் மனிதன் ஈடுபடுகிறான். இந்தக் கோட்பாடே தத்துவத்துக்கும் யுக்திக்கும் பொருந்தியது. ஆக, அந்தந்த உயிர் அமையும் நிலைக்கு அதனதன் முயற்சியே முகாமையாகிறது. வினைக்கேற்ற வினைப்பயன் அமைவது இறைவனுடைய பெரிய திட்டம். அந்தத் திட்டத்தின்படி கடவுளுக்குப் பட்சபாதம் இல்லை.

ஆத்ம சாதகர்கள் சாதனத்தில் முன்னேற்றம் அடைந்தான பிறகு சுவானுபவத்தில் இந்த உண்மைகளைக் கண்டறிகின்றனர். இதுவே ஹிந்துமதத்தின் கோட்பாடாம்.

மனதைப் பண்படுத்தும் ஓசை மந்திரம் எனப்படுகிறது. அந்த ஓசைகளுள் ஒன்று 'சிவ' என்னும் சொல். இது இறைவனுக்கு அமைந்த நாமங்களுள் ஒன்று. சிவ என்னும் நாமத்தின் பொருள் மங்களம் என்பதாம். அந்த அர்த்தத்தை அறிந்திருந்தாலும், அறியாதிருந்தாலும் 'சிவ சிவ' என்று ஓயாது ஓதிக் கொண்டிருக்கின்றவர்கள் மனபரிபாகம் அடைகின்றனர்.

மருந்து ஒன்று எப்பொருள்களைக் கொண்டு ஆயத்தப்படுத்தப்பட்டது என்பதை நோயாளி ஒருவன் அறிந்திருந்தாலும் அல்லது அறியாதிருந்தாலும் அதை முன்னிட்டு மருந்தின் பயன் வீண்போவதில்லை. அதே விதத்தில் பக்தி பூர்வமாக மந்திரங்களை ஜபிக்கின்றவர்களுக்கு மனத்தூய்மையும் தெளிவும் தானே வந்தடைகின்றன.

கேள்வி: (345) அவனன்றி ஓரணுவும் அசையாது. முயற்சி திருவினையாக்கும். இரு கருத்துக்களும் முரண்படுகின்றன அல்லவா?

இந்த இரண்டு கருத்துக்களுக்கும் இடையில் சிறிதளவாவது முரண்பாடு இல்லை. அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் கோட்பாடு அண்டங்கள் அனைத்துக்கும் பொதுவாய் அமைந்தது. ஆட்சிமுறை முழுதும் அரசாங்கத்துக்கு உரியது என்று சிறிய அளவில் ஒரு நாட்டைக் குறித்து நாம் பகர்வதற்கு நிகராக அகிலாண்டத்துக்கும் பொதுவாக இருப்பது அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் கோட்பாடு. ஒரு நாட்டின் ஆட்சி முறைக்கு உட்பட்டு மனிதன் மேன்மையடையலாம். அவன் மேன்மை அடைதற்கும் நாட்டின் ஆட்சி முறைக்கும் இடையில் எங்ஙனம் முரண்பாடு இல்லையோ அங்ஙனம் இறைவனுடைய பெரிய திட்டத்துக்கும் அந்தந்த ஜீவன் அடைகிற முன்னேற்றத்துக்கும் இடையில் முரண்பாடு இல்லை. திட்டத்துக்கு உட்பட்டு முயல்கின்றவர்கள் முன்னேற்றம் அடைகின்றனர். திட்டத்துக்கு மாறி நடப்பவர்கள் தோல்வி அடைகின்றனர்; துன்பத்துக்கும் ஆளாகின்றனர். பிறகு அவர்கள் தங்களைத் தாங்களே திருத்தி அமைத்துக் கொள்ளுதற்கும் இறைவனுடைய பெரிய திட்டத்தில் இடம் உண்டு. இக்கோட்பாடே அண்டம் முழுதிலும் நடைமுறையில் இருந்து வருகிறது.

கேள்வி: (346) சகுனம் பார்ப்பது சரியா?

சகுனம்பார்ப்பதில்ஓரளவுஉண்மைஉண்டு. ஆனால் மனிதன் முற்றிலும் அதில் கருத்து வைக்கலாகாது. மானுடன் ஒருவன் தன் நண்பன் ஒருவனைச் சந்திக்கப் புறப்பட்டுப் போகிறான். பொருந்தாத சகுனம் தென்படுகிறது. பெரும்பாலும் அந்தச் சகுனத்தின்படி நண்பனைச் சந்திக்க முடிவதில்லை. ஆதலால் புறப்பட்டுப் போவதை நிறுத்தி விட்டு அடுத்த நாள் போவது உசிதம்.

இனி, பரீட்சை எழுதச் செல்லும் மாணுக்கன் ஒருவன் சகுனம் சரியில்லை என்று தன் முயற்சியை நிறுத்த முடியாது. அவன் சகுனம் பார்ப்பதும் பொருந்தாது. உண்பது, நீராடுவது போன்ற நித்திய கர்மங்களுக்கும் நாம் சகுனம் பார்ப்பதில்லை. ஆதலால் அவசியம் போய்க் கவனிக்க வேண்டிய காரியங்களைக் குறித்து மனிதன் சகுனம் பார்க்கலாகாது. தெய்வத்தை முற்றிலும் நம்பியிருப்பவர்களும் சகுனம் பார்க்க வேண்டியதில்லை. பெரும்பாலோர் நல்ல சகுனங்கள், கெட்ட சகுனங்கள் என்று நினைப்பதே இல்லை. தம் போக்கில் அவர்கள் வினையாற்றிக்கொண்டு போகிறார்கள். அப்படிச் செல்கின்றவர்கள் பெரும்பாலும் முன்னேற்றமடைந்து வருகின்றனர். நல்ல நேரம் பார்த்து ஒரு காரியத்தில் இறங்க வேண்டும் என்னும் கருத்துடையவர்கள் பெரும்பாலும் சந்தேகப் பேர்வழிகள் ஆகின்றனர். அவர்களுக்கு மன உறுதி படிப்படியாகக் குறைந்துபோகிறது. ஒரு காரியத்தை இன்றைக்குச் செய்யலாமா நாளைக்குச்செய்யலாமா என்று தீர்மானம் செய்யாதிருப்பவன் வேண்டுமானால் ஓரளவு சகுனத்தில் கருத்தைச் செலுத்தலாம். பொதுப்பட சகுனம் பார்க்கும் மனப்பான்மை உதவாது.

---

# நாம் அறிந்துகொள்வோம்

( சுவாமி துருவானந்தர் )

இந்த உலகில் நாம் ஏன் பிறந்தோம் என்று ஆராய்ந்துகொண்டு உட்கார்ந்திருப்பதைவிடப் பிறந்துள்ள நாம் இருக்கிற கொஞ்சகாலத்துக்குள் எப்படி வாழவேண்டும், நம்மைச் சுற்றியுள்ள உலக மாந்தருக்கு எப்படிப் பயன்பட்வேண்டும் என எண்ணி அதன்படி வாழ்ந்தால் நாமும் பயனடைவோம்; நாடும் பயன்படும். பிறந்ததிலிருந்து சாகும்வரை தனக்காகவும் தன் மனைவி மக்கள் ஆகிய தன் குடும்பத்திற்காகவும் வாழும் ஒருவன் தன் கண்களைப் புற உலகில் திருப்பி உலகத்தின் நிலை என்ன? என்பதைப் பார்க்கவேண்டும். தானும் தன் குடும்பமும் மட்டும் பிழைத்தால் போதுமா? மற்றவர்கள் நிலை எந்த விதத்தில் இருக்கிறது என்பதைச் சற்று வெளியுலகில் ஊடுருவிப் பார்த்தால் தன்னுடைய பொறுப்பு என்ன என்பதைப் புரிந்துகொள்வான். பொருளாதாரத் துறையாயிருந்தாலும் சரி, அருள்துறையாயிருந்தாலும் சரி மனிதன் படுகிற கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் தானே. தன்னுடைய அற்பமான சுயநல நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு எத்தகைய கீழ்த்தரமான செயலைச் செய்வதற்கும் மனிதன் ஆயத்தமாயிருக்கிறான். தன் சுயநல நோக்கம் நிறைவேற வேண்டுமென்றால் பொதுநோக்குச் சரியாக இருக்கவேண்டும். பாமர மனிதன் ஒருவன் எப்போதும் தன்னைப்பற்றித்தான் நினைப்பான். அது அவன் இயல்பு. அதற்குமேல் அவன் சிந்தனைசக்தி போவதில்லை. ஆனால் படித்தவர்கள், அறிவுத் தெளிவு பெற்றவர்கள் பாமரன்போன்று தங்களுக்குள்ளே ஓர் எல்லையை அமைத்து அதற்குள்ளேயே அமிழ்ந்து போய்விடக்கூடாது.

நான்கைந்து பேர் சந்தித்துப் பேசும்பொழுது அவர்கள் பேச்சில் முக்கியமாக அடிபடுவது அவரவர் குடும்பப் பிரச்னை. அதிலும் முக்கியமாகப் பொருளாதாரநிலை. பல குடும்பங்களில் பிணக்குகள் வளர்வதற்கும் சண்டை சச்சரவுகள் எழுவதற்கும் உற்றார் உறவினர், நண்பர் தொடர்பு அறுபடுவதற்கும் காரணம் என்ன? பொருள் வேண்டிய அளவு இல்லாமையினால் அதை நிறைவேற்றக் கடன் வாங்கிப் பிறகு அதை அடைக்க முடியாமல் கலங்குவது. குறைந்த வருமானம் உள்ள பெரிய குடும்பம் ஒன்று இருக்கிறதாக வைத்துக்கொள்வோம். அந்த வீட்டிற்குச் சொந்தமாக ஏராளமான நில புலன்கள் இருந்தபோதிலும் முறையாக அவ் வீட்டிலுள்ளவர்கள் உழைத்து விவசாயம் செய்யாமையால் அதில் வருமானம் எடுக்க முடியாமல் வெளியே கூலி வேலை செய்து சாப்பிடும் அவல நிலையில் இருக்கின்றனர். அது மட்டுமன்று. அடிக்கடி வறுமையைச் சமாளிக்க வீட்டுத் தலைவன் கடன் வாங்கிக் குடும்பத்தை நடாத்துகிறான். இவ்வளவு வசதி இருந்தும் அந்தக் குடும்பம் கஷ்டப்பட வேண்டிய அவசியம் என்ன? குடும்பத்தைத் திறமையாக நிர்வாகம் பண்ண வீட்டுத் தலைவனுக்குத் தெரியாமை என்பதே பொருள். அதே போன்றுதான் நம் நாட்டின் நிலையும். இயற்கை வளங்கள் ஏராளம் இருந்தும்அவற்றைப்பயன்படுத்தி நாட்டை வளப்படுத்தாது வெளிநாட்டிலிருந்து உணவுத் தானியங்களை இறக்குமதி செய்துகொண்டு இருக்கிறோம். கல்வி கற்ற நிபுணர்கள் எல்லாரும் வெளிநாட்டிற்குச் சென்று பிழைத்துப் பொருள் சம்பாதித்துத் தாய் நாட்டுக்கு அனுப்புகின்றனர். நம் நாட்டில் உள்ளவர்கள் எல்லாரும் உழைத்துப் பாடு பட்டால் நம் நாடு வெளிநாட்டிலிருந்து கடன் வாங்கிப் பிழைக்க வேண்டிய அவல நிலைக்கு வருமா? இதற்குக் காரணம் என்ன? நாட்டை நிர்வகிக்கும் ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் சரியான, திறமைசாலிகளாக இல்லாமையும், அவர்களிடம் ஊழலும் சுயநலமும் பெருகிப் போனதும்தான் முக்கியமான காரணம்.

நம் நாட்டில் எல்லாரிடமும் உள்ள பெருங்குறை என்னவென்றால் நாட்டை ஆள்வது அரசியல்வாதிகளால்தான் முடியும் என்

றும் நாட்டிலுள்ள ஏற்றத் தாழ்வுகளைப் போக்குபவர்கள் அவர்கள்தாம் என்றும் வறுமையை ஒழிப்பவர்கள் அவர்கள்தாம் என்றும் தப்புக்கணக்குப் போட்டு விடுகிறார்கள். நாட்டில் உள்ள திறமையான டாக்டர்களும், இன்ஜினியர்களும், வழக்கறிஞர்களும், ஆசிரியர்களும் இன்னும் அனுபவம் பெற்ற கூரிய அறிவுள்ள அறிஞர்களும் நாட்டை ஆளும் விஷயத்தில் தலையிடாது அதிலிருந்து ஒதுங்கி அவரவர் வேலையே போதும் என்று பட்டுக்கொள்ளாமல் போவதால் சில தீய சக்திகள் ஒன்று சேர்ந்து தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டி வேண்டிய அளவு சுரண்டி வாழத் தீவிரமாக நுழைந்து தேசத்தில் ஆட்சியை அமைத்துக் கொள்கின்றன.

இன்னும் பலரிடம் உள்ள குறை என்னவென்றால் அரசியலைப் பற்றியே பேசவேண்டாம் ராமா, கிருஷ்ணா என்று சொல்லிவிட்டு நம் கதையை முடித்துவிட்டுப் போனால் சரி என்கிறார்கள். இது எவ்வளவு வடிகட்டின சுயநலம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். அரசியலையும் ஆத்மீகத்தையும் ஒன்றாக இணைத்தவர் காந்தியடிகள். கர்மயோகி ஒருவன் எந்தச் செயலையும் தெய்வ வழிபாடாகச் செய்து தன்னை மேலோனாக்க முடியும் என்பதற்கு மகாத்மா காந்தியடிகளே சரியான சான்று. நல்லோர் அரசியலைப் புறக்கணித்ததன் விளைவாகத்தான் நாட்டில் இவ்வளவு சுயநலம், ஊழல், பித்தலாட்டம் எல்லாம் தாண்டவமாடுகின்றன. மகாத்மா காந்தியடிகள் போன்ற நல்ல உள்ளம் படைத்தவர்கள், உயர் வாழ்வுக்காகத் தங்கள் வாழ்வை அர்ப்பணம் பண்ணியவர்கள் நாட்டை ஆளும் செயலில் ஈடுபட முன்வரவேண்டும். அரசியல் என்பது சாக்கடை, அதில் நுழைபவர்கள் அனைவரும் மாசடைகிறார்கள் என்பது தவறான அபிப்பிராயம். அவரவர் மனப்பான்மைக்கு ஏற்பத்தான் புற உலகம் தென்படுகிறது. ராஜ்யபாரம்ஏற்றுஆட்சிபுரிதல் மக்களுக்குச் செய்யக்கூடிய புனிதமான தொண்டு ஆகும். அரசன் விஷ்ணுவுக்கு நிகராகப் போற்றப் படுகிறான். அரசனுக்குரிய தகைமைகள் இருந்தால்தான் அவன் மக்களால் போற்றப் படுவானே தவிர ஆளும் தன்மை அரசனிடம் இல்லை என்றால் அவன் மக்களால் இகழப்பட்டு ஒதுக்கப்படுவான். பண்டைய அரசர்கள், அமைச்சர்கள் சமயக் கோட்பாட்டைப் பின்பற்றிச் சான்றோர்களை, துறவிகளைக் குருவாக ஏற்று அவர்கள் ஆலோசனையோடு நாட்டை ஆண்டார்கள். சத்ரபதி சிவாஜி மன்னன் சமர்த்த ராமதாஸரைக் குருவாக ஏற்றுத் திறம்பட ஆட்சி புரிந்தவர். வசிஷ்ட மகரிஷியைக் குருவாக ஏற்று அவர் கூறிய அறவழியில் தசரத மன்னன் ஆண்டான். நல்லோர் காட்டிய பிரகாரம் ஆட்சி நடந்தது, ராம ராஜ்யமாயிருந்தது. ஆனால் இன்றோ நேர்மையும் பண்பும் இல்லாதவர்கள் சமயத்திற்குத் தகுந்த மாதிரி பேசி மக்கள் மத்தியில் ஓட்டு வேட்டையாடுகிறார்கள். கடவுள் இல்லை என்றும் கடவுளை நம்புபவன் காட்டுமிராண்டி என்றும் கூறுபவர்கள் தங்களை அறிவுடையவர்கள் என்று எண்ணிக்கொள்கின்றனர்.

'உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்'

என்றார் வள்ளல் பெருமான். ஆகவே காலத்துக்கும், இடத்துக்கும் தகுந்த மாதிரி பேசி மக்களிடம் ஓட்டுப் பெற்று ஆட்சிக்கு வருகின்றவர்கள் ஆட்சிக்கு வந்தபின் மக்களை அடியோடு மறந்து விடுகின்றனர். கட்சியை வளர்ப்பதிலும், கட்சிக்குப் பணம் சேர்ப்பதிலும், தங்களுக்குப் பணம் சேர்ப்பதிலும் தான் அவர்களின் சிந்தனை வேலை செய்கிறது. மக்களுக்கு என்ன தேவை? வாழ்க்கைக்கு எது அவசியம் என்பதைப் பற்றி எல்லாம் அவர்கள் சிந்திப்பதில்லை. ஆகையினால் நல்ல ஆட்சி நிகழ்வதில்லை. இப்பொழுது மக்களும் அதை உணர்கின்றார்கள். பொய்யான வாக்குகளைக்கொடுத்துப் பொய்ப்பிரச்சாரம் பண்ணி ஆட்சியில் இருக்கலாம் என்ற எண்ணத்தை அரசியல்வாதிகள் மறந்துவிட வேண்டும். மக்களிடம் உள்ள ஒரே சக்தி வாக்குரிமை. பாமர மக்களை ஏமாற்றி ஓட்டு வாங்கி ஆட்சியில் வெகு நாள் நீடிக்க முடியாது. சத்தியம் பேசித் தர்மத்தைக் கடைப் பிடித்தால் அது அவர்களுக்கும் நல்

லது நாட்டிற்கும் நல்லது.

மேடைப் பேச்சுப் பேசிப் பழகுகிறவர்களுக்கு ஆரம்ப அரிச்சுவடி சொல்லித் தருவார்கள். பேசுவதற்கு மேடையில் ஏறியவுடன் தம் முன் உள்ள மக்களை முட்டாள்களாக, ஒன்றும் தெரியாதவர்களாக எண்ணிக்கொண்டு பேசவேண்டும் என்று கூறுவார்கள். அது தவறு. மக்கள் முன் உண்மையைத் தெளிவாகவும் உறுதியாகவும் எடுத்துச் சொல்லவேண்டும். தாம் பேசும் கருத்து மக்கள் உள்ளத்தில் ஆழ்ந்து பதியுமாறு பேசவேண்டும். கடந்த பிப்ரவரி 13ஆம் தேதி நாகர்கோயிலில் ஹிந்துக்கள் ஊர்வலம் நடத்த அனுமதி கோரியிருந்தார்கள். மாவட்டத் தலைவரும் அனுமதி வழங்கி ஹிந்து முன்னணியினருக்கு எத்தகைய கோஷங்களைப் போடவேண்டும், எப்படி எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்றெல்லாம் விளக்கம் கொடுத்துவிட்டுப் பிறகு பிப்ரவரி பன்னிரண்டாம் தேதியன்று ஊர்வலம், மாநாடு நடத்தத் தடைவிதித்தார்கள். தடையை மீறி அமைதியாகச் சென்ற ஹிந்துக்களின் மீது அடக்கு முறையைக் கட்டவிழ்த்துவிட்டுத் துப்பாக்கிச் சூடும் நடந்துள்ளது. திடீரென்று மாவட்ட ஆட்சித் தலைவர் ஏன் இந்தத் தடை விதித்தார்? அண்மையில் நடந்த திருச்செந்தூர் தேர்தலில் ஆளும் கட்சி சார்பாக நின்றவர் ஒரு கிறிஸ்தவர். ஆக, கிறிஸ்தவர்களின் ஓட்டைப் பெறுவதற்கு இந்துக்களின் ஊர்வலத்தை, மாநாட்டைத் தடைசெய்து ஹிந்துக்கள் மீது அட்க்குமுறை கையாளப்பட்டு ஹிந்து தலைவர்கள் சிறையில் வைக்கப்பட்டனர். இந்தியா சமயச் சார்பற்ற நாடு என்று சொல்லிக்கொண்டு அதேநேரத்தில் கிறிஸ்தவ, முஸ்லிம்களின் ஓட்டுக்காக மத சுதந்திரத்தைப் பறிப்பது நியாயமாகுமா? சேலத்தில் முஸ்லீம் மகாநாடு, மீலாடி நபி ஊர்வலம், கிறிஸ்தவர் மகாநாடு முதலியனவற்றைச் சமீபகாலத்தில் தமிழகத்தில் நடத்த அனுமதி கொடுத்துவிட்டு ஹிந்து மகாநாட்டை நடத்துவதற்கு மட்டும் தடை போடுவது நியாயமாகுமா? அண்மையில் ஏற்பட்ட மீனாட்சிபுரம் மதமாற்றம், மண்டைக்காடு கலவரம், புளியங்குடி கலவரம், நாகர்கோயில் துப்பாக்கிச் சூடு முதலியன நன்மைக்காகவே நிகழ்ந்துள்ளன. இப்படி நிகழ்வதற்கு ஹிந்துக்களிடையே ஒற்றுமை இன்மையே காரணமாகும். குறிப்பாக ஹிந்துக்கள் எந்தக் கட்சியில் இருந்தாலும் கட்சி வேறுபாட்டை மறந்து ஹிந்துக்களுக்காகப் பாடுபடும் வேட்பாளருக்கு ஓட்டுப் போடவேண்டும். இந்துக்களிடையே ஒற்றுமை ஏற்பட்டு, தாங்கள் இந்துக்கள் என்ற உணர்வு பெற்று இந்து மதத்தை அழியாது காப்பதற்கு இந்துக்கள் ஒவ்வொருவரும் பாடுபடவேண்டும். இந்துக்களை ஒடுக்க முயல்கின்ற சட்டங்களை, இந்துக்கள் மீது மட்டும் திணிக்கப்படுகின்ற சட்டங்களை எதிர்த்து இந்துமத வளர்ச்சிக்கு ஏற்படும் தடையைப் போக்க வேண்டும். எம் மதமும் சம்மதம் என்பது இந்து மதக் கோட்பாடு. ஆனால் இந்து மதத்தை அழிக்க வரும் சக்திகளை எதிர்த்து நின்று முறியடிக்க வேண்டுமென்பதை இந்துக்கள் உணரவேண்டும். இந்து மதத்துக்குப் பாதுகாப்புவேண்டும். இந்து மதத்தை அழிக்க முயல்கின்றவர்களுக்கு இந்துக்கள் சரியான பாடம் புகட்டவேண்டும்.

இந்து மதத்தில் சமரசக்கொள்கைகளுக்கு ஏராளமாக இடம் உண்டு. அது எல்லா மதங்களுக்கும் தாய் மதமாகையால் எல்லா மதங்களையும் தன்னுள் அடக்கி வைத்திருக்கிறது. ஆகையால் எல்லா மதத்தினர்களும் இந்து மதத்தை ஓர் அந்நிய மதமாக எண்ணத் தேவை இல்லை. இந்து மதத்தின் சமரசக் கொள்கையையும், தார்மீகத் தன்மையையும் புரிந்துகொள்ளாது இந்து மதத்தைக் குலைக்க முயல்கின்றவர்களுக்கு இந்துக்கள் சரியான பாடம் புகட்ட வேண்டும். இந்துக்கள் நல்லவர்கள் மட்டுமல்லர்; அவர்கள் வல்லவர்களும் ஆவார்கள் என்பதை மற்ற மதத்தினர்கள் அறிந்து கொள்ள வேண்டும். இந்து மதத்தை அழிக்கும் சக்திகள் தோன்றும்பொழுதெல்லாம் அவை முறியடிக்கப்பட்டுக்கொண்டே இருக்கின்றன. இவ்வுண்மையைச் சரித்திரம் விளக்கிக்கொண்டிருக்கிறது.

---

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன )

एवमात्मारणौ ध्यानमथने सततं कृते ।
उदितावगतिर्ज्वाला सर्वाज्ञानेन्धनं दहेत् ॥

एवं (ஏவம்) இங்ஙனம் आत्मा अरणौ (ஆத்மா அரணௌ) அந்தக்கரணம் என்னும் அரணிக் கட்டையில் सततं कृते (ஸததம் க்ருதே) இடையறுது செய்யப்பட்ட ध्यान मथने (த்யான மதனே) தியானம் என்னும் கடைதலில் उदिता (உதிதா) தோன்றிய अवगति ज्वाला (அவகதி ஜ்வால) ஞானமாகின்ற நெருப்பு सर्व अज्ञान इन्धनं (ஸாவ அக்ஞான இந்தனம்) அறியாமை என்ற விறகை दहेत् (தஹேத்) எரிக்கின்றது.

"அந்தக்கரணம் என்னும் அரணிக்கட்டையில் இடையறுது செய்யப்படும் தியானம் என்ற கடைதலால் உண்டாக்கும் ஞானமாகிய ஜ்வாலை அனைத்து அஞ்ஞானமாகிய கட்டையை எரித்துவிடுகின்றது."

அரணிக்கட்டையைக் கடைந்து தீயை உண்டாக்குவது ரிஷிகளின் முறையாகும். அக்காலத்தில் நிலவிய பழக்கங்களையே உவமையாகக் கொண்டு, உயர்ந்த தத்துவத்தை உபதேசிக்கும் ஆசாரியரின் முறை மனதைக் கவர்கின்றது. அன்ருட உதாரணம்; அறிந்தவற்றினின்று அறியாதது (Day to day example; from the known to the unknown) என்று கல்வியாளர்கள் போற்றும் முறையை ஆசாரியர் பெரிதும் கடைப்பிடிப்பதை நாம் பலமுறை காணலாம்.

ஆத்மா என்ற சொல் இங்கு அந்தக்கரணத்தைக் குறிக்கும். இடைவிடாத தியான அப்பியாசத்தின் முக்கியத்துவத்தை இந்தப் பாடல் உணர்த்தும். 'ஏவம் - இவ்வாறு' என்ற சொல்லால் முன்பு கூறிய ஆறு சுலோகங்களை அடிப்படையாகக் கொண்டு தியானம் அமையவேண்டும் என்று குறிப்பிடப் படுகின்றது. 'அழுக்கு அனைத்தையும் அக்னி எரிப்பதுபோல் எவனுடைய கர்மங்களை ஞான அக்னி எரித்துவிடுகின்றதோ அவனே ஞானி' என்பது கீதை (IV-19). அஞ்ஞானம் முற்றிலும் நாசமடைவதே ஞானம் ஆகும். எனவே ஞான உதயமும், அஞ்ஞான நாசமும் ஒன்றே. 'பரம்பொருளைக் கண்டவுடன் இதய முடிச்சுகள் அனைத்தும் அவிழ்கின்றன; சந்தேகங்கள் எல்லாம் நாசமடைகின்றன; கர்மங்கள் எல்லாம் அழிகின்றன' என்கிறது கடோபநிஷத்.

கைவல்ய உபநிஷத் அரணிக்கட்டை உவமையை அழகாகப் பயன்படுத்துகின்றது. "கீழே உள்ள அரணிக்கட்டை மனம்; மேலே உள்ளது ஓம். இரண்டையும் கடைவதால் (மனதில் ஓங்காரத் தியானத்தைச் செய்வதால்) உண்டாகும் உராய்வு தீயைத் (ஞானத்தை) தோற்றுவிக்கின்றது. அந்தக்கரணத்தில் உள்ள அசுத்தங்கள் அனைத்தும் இதில் எரிந்து நாசமாகின்றன."

த்யான மதனம் ஸததம் க்ருதே–தியானம் என்ற கடைதலை இடைவிடாது செய்ய வேண்டும். தீ எழும் வரை அரணிக் கட்டைகளைக் கடையவேண்டும். பசி தீரும் வரை உண்ண வேண்டும். மரக்கட்டை பிளவுபடும் வரை கோடாரியினுல் பிளக்க வேண்டும். கடைசிக் கடைதல் எது, கடைசிக் கவளம் எது, கடைசிப்பிளவு எது என்று எவரேனும் முற்கூட்டியே கூறமுடியுமா? காய் கனிந்து பழமாகின்றது. இந்த நுட்பமான மாற்றம் எந்தக்கணத்தில் நிகழ்ந்தது என்று உறுதியாக யாரால் கணிக்க முடியும்? 'அனுபவமே' கடைசி வார்த்தை. பசி நீங்குவது உண்பவனுக்கே தெரியும். அங்ஙனம் ஞானோதயம், அஞ்ஞான நாசம் என்பதை அபரோக்ஷ அனுபூதியில் உள்ளவனே அறிவான். எனவே கர்ம பலத்தைப் போல் அல்லாது ஞான பலமானது 'அனுபவ அவசாதனம்—அனுபவத்தை முடிவாகக்கொண்டது' என்று ஸ்ரீசங்கராச்சாரியார் குறிப்பிடுகின்ருர்.

अरुणेनेव बोधेन पूर्वं सन्तमसे हृते ।
तत आविर्भवेदात्मा स्वयमेवांशुमानिव ॥

अरुणेन एव (அருணேன ஏவ) அருணோதயம் போன்ற बोधेन (போதேன) ஞானவெளிச்சத்தால் पूर्वं (பூர்வம்) முதலில் तमसे हृते सन् (தமஸே ஹ்ருதே ஸன்) இருட்டு அழிக்கப்

பட்ட பின் ततः (தத:) பிறகு आत्मा (ஆத்மா) ஆத்மா अंशुमान् इव (அம்சுமான் இவ) சூரிய னைப் போல स्वयमेव (ஸ்வயமேவ) தானே आविर्भवेत् (ஆவிர்பவேத்) வெளிப்படுகின்றது.

அதிகாலையில் சூரிய உதயம் ஆனபின் இருட்டு விலகி விடுவதைப் போல், அக்ஞானம் அகன்றபின் ஆத்மா சுயம் பிரகாசத்துடன் வெளிப்படுகின்றது.

அகஞானத்தைத் 'தமஸ்' என்றும் ஞானத்தை அம்சுமான் (சூரியன்) என்றும் குறிப்பிட்டுள்ள அழகைக் காணவேண்டும். 'தமஸோ மா ஜ்யோதிர் கமய-இருட்டிலிருந்து என்னை வெளிச்சத்திற்கு அழைத்துச் செல்' என்ற வேதகால பிரார்த்தனை இதில் பிரதிபலிக்கின்றது. பரம்பொருள் கோடி சூரியப் பிரகாசத்துடன் விளங்குவதாக வர்ணிப்பார்கள். 'மெய்ச் சுடருக்கெல்லாம் ஒளி வந்த உத்தரகோச மங்கைக் கரசே' என்பார் மாணிக்க வாசகர். "ஜ்யோதிஷாமபி தத் ஜ்யோதி: தமஸ: பரம் உச்யதே-ஒளிகளுக்கு எல்லாம் பேரொளியாகத் திகழ்ந்து இருட்டினைக் கடந்து இருப்பது அது"—(கீதை XIII-17). "எவருடைய அக்ஞானம் ஞானத்தால் அழிக்கப்படுகின்றதோ, அவர்களுக்கு அந்த ஞானம் சூரியனைப் போலப் பரம்பொருளைப் பிரகாசிக்கச் செய்கின்றது — தேஷாம் ஆதித்யவத் ஞானம்" (கீதை V-16) ஞானத்தைச் சூரியனுடன் ஒப்பிட்டுக் காட்டுகின்றார் கண்ணனும்.

புராணக் கோட்பாட்டின்படி அருணன் சூரியனின் ரதமோட்டி. அவன் ரதத்தைச் செலுத்தும்போது இருள் அகன்று விடுகின்றது. 'பொழுது புலர்ந்தது, புன்மை இருட்கணம் யாவும் போயின' என்று கவிதை பாடுகின்றோம். ஞான உதயம் ஒன்றே வேண்டத்தக்கது. எனவே சூரிய காயத்ரீ மந்திரமும் பெருமையுடைதது. "செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத் தேர்கின்றோம்-அவன் எங்கள் அறிவினைத் தூண்டி நடத்துக" என்று பாரதி காயத்ரீ மந்திரத்தைத் தமிழில் அழகாகப் பாடியுள்ளார்.

आत्मा तु सततं प्राप्तोऽप्यप्राप्तवदविद्यया ।
तन्नाशे प्राप्तवद्भाति स्वकण्ठाभरणं यथा ॥

आत्मा (ஆத்மா) ஆத்மா सततं (ஸததம்) எப்போதும் प्राप्तः अपि (ப்ராப்த: அபி) அடையப்பட்டது எனினும் अविद्यया அவித்யயா) அஞ்ஞானத்தினால் अप्राप्तवत् (அப்ராப்தவத்) அடையப்படாதது போல் तत् नाशे (தத் நாசே) அதன் அழிவில் यथा (யதா) எவ்வாறு स्वकण्ठाभरणं (ஸ்வகண்ட ஆபரணம்) தனது கழுத்தில் உள்ள நகைபோல் प्राप्तवत् (ப்ராப்தவத்) அடையப்பட்டது போல் भाति (பாதி) பிரகாசிக்கின்றது.

ஆத்மா எப்பொழுதும் அடையப்பட்டதே; அஞ்ஞானத்தால் அது அடையப்படாததாகத் தோன்றும். அதன் அழிவிற்குப் பின், தனது கழுத்திலே உள்ள ஆபரணத்தைப் போல் புதிதாக அடையப்பட்டதாகத் தோன்றுகிறது.

தன்னுடைய கழுத்தில் உள்ள ஆபரணம் எக்கணமும் அடையப்பட்ட ஒன்றே. எந்தக் கணமாவது அது அடையாத வஸ்துவாக இருக்கக் கூடுமா? ஆயினும் இந்த உண்மையை அறியாது தொலைந்து போன ஆபரணத்தைத் தேடும்பொழுது, மனதில் எத்தனை கிலேசம்! மனம் படும் பாடுதான் சொல்வதற்கெளிதோ? 'இதோ, நகை உன் கழுத்திலேயே இருக்கின்றதே!' என்று எவரேனும் சுட்டிக்காட்டிய பின், 'ஆம், நகை தொலையவில்லை; கிடைத்து விட்டது' என்ற அனுபவத்தால் பிறக்கும் ஆனந்தத்தை வர்ணிப்பது எளிதோ! தொலையாத ஒன்று தொலைந்தது என்ற அஞ்ஞானத்தால் அடையப்படாதது போலக் காணப்படும் உண்மையை உணர்ந்தவுடன், புதிதாகக் கிடைத்ததுபோல் தோன்றுகின்றது. ஆனால் மனப் பிராந்தி அகன்றது என்பதே உண்மை.

'ப்ராப்ய' அடைவது என்ற நிலை கர்ம காண்டச் செயல்களின் விளைவைக் குறிக்கும். இப்பொழுது இல்லாது, பிறிது ஓரிடத்தில், ஒரு நேரத்தில் (இறந்தபின் ஸ்வர்க்கத்தில்) அடைவது கர்மபலனின் லட்சணமாகும். ஆத்ம ஞானமோ அத்தகையது அன்று. 'உன்னுடைய ஸ்வரூப நிலையே அது' என்கிறது வேதாந்தம்.

தன்னிடத்தே உள்ள ஸ்வரூப லட்ச

ணத்தை உணராது அலைவதே அறியாமையாகும். ஆட்டிடையன் ஆட்டுக்குட்டி ஒன்றைத் தன் தோளில் போட்டுக்கொண்டே, அவ்வாட்டுக் குட்டியைக் காணவில்லையே என்று பரிதபித்துத் தேடினான். 'இதோ, உன் ஆட்டுக்குட்டி, அஃது உன் தோளிலேயேதான் இருக்கிறது' என்று ஒருவன் சுட்டிக் காட்டினான். ஆட்டுக்குட்டியை இடையன் இழக்கவே இல்லை. ஆயினும் அறியாமையால் இழந்ததாகவே எண்ணித் தேடினான்; அது மனப்பிராந்தியேயொழிய வேறன்று. கஸ்தூரிமான் நறுமணத்தைத் தானே உற்பத்தி செய்கின்றது. அந்த நறுமணம் எங்கிருந்து வருகின்றது என்பதை அறிய பல திக்குகளிலும் ஓடி, இளைத்து அல்லல்படுகின்றது. அதுபோன்று நாம் அனைவரும் அல்லல் படுகின்றோம். 'உள்ள பொருள்...உள்ளத்தே உள்ளபடி உள்ளதே உள்ளல் உணர்' என்று ஸ்ரீ ரமணர் உரைக்கின்றார். (உள்ளது நாற்பது, முதல்பாடல்) அவரிடம் ஓர் அன்பர் வந்து, தன்னுடைய கஷ்டங்களை எல்லாம் சொல்லி, அழுது புலம்பினார். அதற்கு மகரிஷி ஏதும் பேசாது இருந்தார். அன்பர் சென்றதும் மகரிஷி மெதுவாக, ஆனால் அழுத்தமாகக் கூறியதாவது: ''அழறான்! எதற்கு அழணும்? சொரூபத்தில் இருந்தது இருந்தபடி இருப்பதை விட்டு விட்டு அழறான்!''

தன்னுடைய காலடியில் பொக்கிஷம் புதையுண்டு கிடப்பதை உணராது மேலும் கீழும் ஒருவன் நடை போடுகின்றான். அவனுக்கே உரிய செல்வத்தை அறியாதிருக்கிறான். அவனைப் போன்றே ஆத்ம ஞானச் செல்வத்திற்கு உரியவர்களாகிய நாம் அதனை உணராது அஞ்ஞானத்தில் அமிழ்ந்துள்ளோம் என்று பிருஹத் ஆரண்யக உபநிஷத் கூறும். ''அமிர்தமயமான என் செல்வர்களே, என் உரையைக் கேளுங்கள்—ச்ருண்வந்து விச்வே அம்ருதஸ்ய புத்ரா:'' என்று வேதகால ரிஷி நம்மை அழைப்பதும் இதனாலன்றோ!

ஒரு நாட்டின் இளவரசன் காட்டில் செல்லும்போது வழி தவறி வேடுவர் கூட்டத்தினரிடையே சிக்கிக்கொண்டான். அவர்களோடு பல ஆண்டுகள் வாழ்ந்து, வேடுவனாகவே வளர்ந்தான். எப்படியோ அவனை அந்த நாட்டின் மந்திரி கண்டு பிடித்து, அரசனிடம் அழைத்துச் சென்றார். 'நான் இளவரசன்; வேடுவன் அல்லன்'' என்று பின்பு அவன் உணர்ந்தான். ஆயினும் வேடுவனாகத் தன்னை எண்ணியபோதும் அவன் இளவரசனே! 'வேடுவன்' என்ற நிலை மாறி 'இளவரசன்' ஆக மாறினான் என்று கூறுவது பொருத்தமற்றது.

ஆட்டுக் கூட்டத்தை நோக்கிக் கர்ப்பிணியாகவிருந்த ஒரு சிங்கம் பாய்ந்தது. அந்த அதிர்ச்சியில் சிங்கம் குட்டியை ஈன்றது. அது அப்போதே மாண்டுவிட்டது. சிங்கக் குட்டியோ ஆடுகளுடன் சேர்ந்து வாழ்ந்தது. மற்ற ஆடுகள் போன்று புல்லைத் தின்று தன்னை ஆடாகவே எண்ணித்திரிந்தது. தான் வேறினம் என்ற எண்ணம் அதற்கு ஏற்படவில்லை. பல நாட்களுக்குப் பின்னர், இக்கூட்டத்தை வேறொரு சிங்கம் தாக்கியது. சிங்கக் குட்டி மற்ற ஆடுகளுடன் 'மே, மே' என்று ஓலமிட்டு ஓடியது! ஆச்சரியம் மேலிட சிங்கம் அதனைப் பாய்ந்து பிடித்தது. 'ஏய் சிங்கக் குட்டி! ஏன் ஆடுபோல் அலறி ஓடுகின்றாய்?' 'இல்லை! நான் சிங்கம் அன்று.. நான் ஆடுதான்.' 'அப்படியா! என்னுடன் வா. தடாகத்தில் உன் உருவத்தைப் பார். என்னைப் போலவே நீ இருக்கின்றாய். உண்மையை உணர்ந்துகொள்.' 'ஆம், உண்மைதான். நான் ஆடு அன்று. சிங்கம்தான்!' ஆடு சிங்கமாக மாறவில்லை. தன்னை ஆடாக எண்ணியபொழுதும் அது சிங்கமாகவே தான் இருந்தது. சிங்கம் தனது நிலையை மறந்து இருந்தது. அவ்வளவுதான்.

'ஆத்ம ஞானம் அடையப் பெறும் வஸ்து அன்று, என்றும் அடையப்பட்ட ஒன்று' என்ற தத்துவம் இங்ஙனம் பல உதாரணங்களால் விளக்கப்படுகின்றது. நாம் செய்யும் வழிபாடு, ஜபம், தவம், சாஸ்திர ஆராய்ச்சி, தியானம் என்ற பல சாதனங்களின் அடிப்படை இலட்சியம் அஞ்ஞானத்தை அகற்றுவதே. ஞானத்தைப் புதியதாகத் தோற்றுவிப்பது அன்று என்ற ஆழ்ந்த கருத்தை இப்பாடல் தருகின்றது.

# விரிவடைவதே வாழ்வு

"மனம்போல மாங்கல்யம்" என்பது பழமொழி. மனத்தின் பாங்கு நல்லதாக இருந்தால் வாழ்வு மகிமை உடையதாகிறது. மனத்தின் பாங்கு கெட்டுப் போய்விட்டால் வாழ்வு சீர்குலைந்து போய்விடுகிறது. மனதை வெளுத்து வந்த வெள்ளை வஸ்திரத்தோடு ஒப்பிடலாம் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். வெள்ளை வஸ்திரத்தில் விரும்பிய சாயத்தை ஏற்றலாம். அழுக்குப் படிந்த துணியிலோ, வர்ணம் உடைய துணியிலோ விரும்பிய சாயத்தை ஏற்றமுடியாது. வெள்ளை வஸ்திரமாக இருக்கும்பொழுது எந்த நிறச் சாயத்தொட்டியில் வெள்ளைத் துணியை நனைக்கிறோமோ அந்தச் சாயம் அதில் படிந்துவிடும் அது போன்று மனதை எதனிடம் தொடர்பு வைக்கின்றோமோ அதனுடைய இயல்புகளெல்லாம் மனதில் படிந்துவிடுகின்றன. மனம் கெட்டுப்போகாமல் பாதுகாப்பது மானுட வாழ்க்கையின் லட்சியமாகும். உடல் கெட்டுப்போய்விட்டால் உடலில் நோய்கள் உண்டாகின்றன. மனம் கெட்டுப்போய்விட்டால் வாழ்க்கையில் துன்பங்கள் சம்பவிக்கின்றன மக்களுக்கு இவ் உண்மை விளங்குவதில்லை. மனப்பாங்கைக் கெடுத்துவிடும் சூழ்நிலையை உருவாக்கி மனதைப் பாழ்படுத்திக்கொண்டிருக்கின்றனர். இதன் விளைவாக இன்றைக்கு மக்கள் 'துன்பமே எந்நாளும் இன்பமில்லை' என்ற நிலைக்கு ஆளாகி இருக்கின்றனர்.

வாழ்க்கை உருவாவது விழித்திருக்கும் நிலையிலாகும். கனவு காண்கின்றபொழுதோ கனவற்று உறங்குகின்றபொழுதோ வாழ்க்கையில் எம்மாறுதலும் உண்டாவதில்லை. விழித்திருக்கும் வேளையைத்தான் வாழ்வு என்று பகரலாம். பகல்வேளையில் விழித்திருந்து வாழ்வை நடாத்தி வருகின்றோம். இரவுவேளையில் பெரும்பாலும் உறக்கத்திலோ கனவிலோ கழிக்கின்றோம். பகல் வேளையை மனப்பாங்கைத் திருத்துதற்கென்று பயன்படுத்த வேண்டும். அதிகாலை நான்கு மணியிலிருந்து சூரிய உதயம்வரையில் உள்ள காலம் பிராம்ம முகூர்த்தம் ஆகின்றது. அப்பொழுது இயற்கை எங்கும் சத்துவ குணம் ஓங்கி இருக்கின்றது. அந்த வேளையில் படுக்கையை விட்டு எழுந்திருந்து நாமஜபம், தியானம், வேதம் ஓதுதல் முதலான செயல்களில் மனதை ஈடுபடுத்தினால் மனதில் சத்துவ குணம் ஓங்குகிறது. மனதில் சத்துவகுணம் ஓங்குதற்கு ஏற்ப மனம் உயர்ந்த பாங்குடையதாக் மாறுகிறது.

ஒவ்வொரு குடும்பத்திலும் அதிகாலை நேரத்தில் குடும்பத்தார் அனைவரும் ஜபம், தியானம், உபநிஷதம், பகவத்கீதை, தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் போன்ற நூல்களை ஓதுதல் என்ற செயலில் ஈடுபடுவார்களானால் அக்குடும்பத்தில் உள்ள மக்கள் சத்துவகுணம் ஓங்கப் பெற்றவர்களாக மாறி அமைவார்கள். அக்குடும்பத்தில் சண்டை சச்சரவோ போட்டி பொறாமையோ உண்டாகா. அன்பும், அடக்கமும், அமைதியும், முகமலர்ச்சியும், சலிப்பில்லாத செயலும் அக்குடும்பத்தில் நாள்தோறும் நிகழ்ந்துவரும். குடும்ப வாழ்க்கை நடாத்துதற்கு இடையில் அக் குடும்பத்திலுள்ளவர்களுடைய மனம் உயர்ந்த நிலைக்கு ஆயத்தமாகி வரும். குடும்பத்தை அன்புடன் நேசிப்பதற்கிடையில் அவர்களுடைய மனம் குடும்பப் பற்றுக்கு உள்ளாகாதிருந்து பழகும். குடும்பத்தைத் திறமையுடன் நடத்துவதற்கிடையில் குடும்பப் பற்று இல்லாதிருந்து பழகுவதே குடும்பவாழ்வின் ரகசியமாகும். இதைத்தான் பண்டைய ரிஷிகள் செய்து வந்தார்கள். பண்டைய ரிஷிகள் மனைவி மக்களோடு வாழ்ந்தார்கள். மனைவி மக்களோடு வாழ்ந்ததற்கிடையில் ஒழுக்கம் நிறைந்தவர்களாகவும், பக்தி நிறைந்தவர்களாகவும், ஞானம் நிறைந்தவர்களாகவும் வாழ்ந்து வந்தார்கள். எனவே குடும்ப வாழ்க்கை ஓர் ஆச்ரம வாழ்க்கையாக இருந்தது. அக்குடும்ப வாழ்க்கையினின்று சத்புத்திரர்கள் தோன்றினார்கள். பெற்றோர்

கள் பிள்ளைக்குத் தவத்தையும், சீலத்தையும், தியாகத்தையும் செல்வமாகத் தேடி வைத்தார்கள். இந்தச் செல்வங்களைப் பெற்ற செல்வர்களும், செல்விகளும் தன்னம்பிக்கையும் தெய்வ நம்பிக்கையும் உடையவர்களாகவும், தியாகத்தையும், தொண்டையும் லட்சியமாகக் கொண்டவர்களாகவும் விளங்கினார்கள். ஒவ்வொரு ரிஷி குடும்பத்தினரும் நாட்டுக்கு நன்மக்களை உருவாக்கித் தந்தார்கள். நாட்டுக்கு அவர்கள் செய்த தொண்டு ஈடு இணையற்றதாக இருந்தது ஒவ்வொரு குடும்பமும் இன்றைக்கு அத்தகைய லட்சியக் குடும்பமாக மாறி அமையுமானால் ஜனநாயகம் அல்லது குடியரசு அல்லது மக்கள் ஆட்சியின் மஹிமை அளப்பரியதாக இருக்கும். ஈடு இணையற்றது ஜனநாயக ஆட்சி என்பதை அப்பொழுது அறியலாம். குடும்ப வாழ்வு வாழ்கின்றவர்கள் காமத்துக்கும், காசு ஆசைக்கும் அடிமைப்பட்டவர்களாக இருந்து மனப்பாங்கைக் கெடுத்துக்கொள்கின்ற பாங்கில் வாழ்க்கை நடாத்தி வருவார்களானால் அவர்களால் நாட்டுக்குப் பெரும் தீமையே விளையும். அத்தகையவர்களுக்குத் தோன்றும் சந்ததிகள் அரக்க சுபாவம் படைத்தவர்களாகவும், காமவசப்பட்டவர்களாகவும், சுயநலம் படைத்தவர்களாகவும், ஒன்றுக்கும் உதவாத தொத்தல்களாகவும் இருப்பார்கள். அவர்களால் நாடு நலிவு அடையும். ஜனநாயகம் பாதுகாக்கப்படவும், சுதந்தரம் பாதுகாக்கப்படவும் ஒவ்வொரு குடும்பமும் தவவாழ்வில் ஈடுபடுதல் வேண்டும்.

பல குடும்பங்கள் சேர்ந்து ஓர் ஊர் ஆகிறது. ஒவ்வொரு குடும்பத்தினரும் கிராம நலத்தில் கருத்துச் செலுத்த வேண்டும். தங்கள் வீடு வாசல்களைத் துப்புரவாக வைத்துக்கொள்வதில் கவனம் செலுத்துவதோடு தாங்கள் வாழும் ஊர் அல்லது கிராமத்தைத் துப்புரவாக வைத்துக்கொள்வதில் கவனம் செலுத்தவேண்டும். ஊரப் பொது இடத்திலுள்ள குளம், கிணறு, ஏரி முதலியவைகளிலுள்ள தண்ணீரையும்அவற்றின் சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். இன்றைய மக்கள் தங்கள் வீடுகளில் கழிவறைகள் வைத்திருக்கிறார்கள். ஆனால் அக்கழிவறையைச் சுத்தமாக வைத்துக்கொள்ள அவர்களுக்குத் தெரிவதில்லை. கிராமத்தில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனியாகப் பொது இடத்தில கழிவறைகளை அமைக்கவேண்டும். அக்கழிவறைகளை மல ஜலம் கழிப்பதற்கு உபயோகப்படுத்த வேண்டும். அவற்றை உபயோகப்படுத்திய பின் தண்ணீர் விட்டுச் சுத்தப்படுத்திய பின் வெளியேறவேண்டும். வீட்டில் பூஜை அறைகளைச் சுத்தமாக வைத்திருப்பது போன்று கிராமப் பொது இடத்திலுள்ள கழிவறைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். இதில் கிராம மக்கள் அனைவரும் கருத்துச் செலுத்தவேண்டும். ஆண்டுக்கு ஒரு முறை பொது இடத்திலுள்ள மலக் குழியில் சேர்ந்துள்ள மலங்களை எல்லாம் ஏலம்போட்டு நிலத்துக்கு உரமாகப் பயன்படுத்தத் தந்துவிடலாம். ஏலத்தில் வருகிற பணத்தைக் கிராமப் பொதுப் பணிக்குப் பயன்படுத்தலாம். இப்படி மலத்தின் மூலம் சீனநாட்டினர் கோடிக் கணக்கான பணத்தைத் திரட்டுகிறார்கள். நம் நாட்டில் இதை நடைமுறைக்குக் கொண்டு வராது ஏராளமான மலம் விரயமாகிக் கொண்டிருக்கிறது. நம் அரசாங்கத்துக்கு மக்களுக்குத் தேவை இல்லாத கள், சாராயம், பீர், பிராந்தி போன்ற மதுபானக்கடைகளைத் திறந்து வைப்பதன் மூலமாகவும், சோம்பேறித் தனத்தை வளர்க்கும் பரிசுச் சீட்டின் மூலமாகவும், மக்களிடையே வரி விதிப்பதன் மூலமாகவும் நிதி தேட ஆட்சியிலுள்ளவர்கள் தெரிந்திருக்கிறார்கள். மலத்தின் மூலம் விரயமாகிக் கொண்டிருக்கின்ற கோடிக்கணக்கான பணத்தைப் பயன்படுத்துவதற்கு எவ்விதச் சிந்தனையையும் செய்யாதவர்களாக இருக்கிறார்கள்.

குடும்பத்துக்கு ஒரு தலைவன் இருந்து குடும்பத்தை நிர்வகிப்பது போன்று கிராமத்தை நிர்வகிக்கக் கிராமத் தலைவன் ஒருவனை மக்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். நல்லவனாகவும், வல்லவனாகவும், தியாக புத்தி படைத்தவனாகவுமிருப்பவன் கிராமத் தலைவ

ளுவதற்குத் தகுதியுடையவனாகின்றான். அப் போப்பட்டவனைக் கிராம மக்கள் ஏக மன தாகத் தேர்ந்தெடுக்கவேண்டும். ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிக்கூடமும் ஆலயமும் இருக்க வேண்டும். பள்ளிக்கூடத்தில் சிறு வர், சிறுமிகளுக்கு மனதைப் பண்படுத்து கின்ற பயிற்சி நிகழ வேண்டும். பள்ளியை யும் ஆலயத்தையும் நிர்வகிக்கும் பொறுப் பைக் கிராம மக்களே ஏற்றுக்கொள்ள வேண்டும். அரசாங்கத்திடமிருந்து அவை களை நடாத்துவதற்கு வேண்டிய நிதி உதவி யைப் பெறலாம். ஆனால் அவைகளினுடைய நிர்வாகத்தில் அரசாங்கத்துக்குச் சம்பந்தம் இருக்கக்கூடாது. நிர்வாகத்தில் அரசாங்கம் தலையிடுவது கிராம மக்களுடைய சுதந் தரத்தைப் பறிப்பதாகும். ஜனநாயக ஆட் சியில் அதற்கு இடம் இருக்கக் கூடாது.

ஒவ்வொரு குடும்பத்திலும் காலையிலும் மாலையிலும் குடும்பத்தவர்கள் அனைவரும் சேர்ந்து செய்கின்ற கூட்டுவழிபாடு நிகழ வேண்டும். அதேபோன்று கிராமத்திலுள்ள ஆலயத்தில் காலையிலும் மாலையிலும் கூட்டு வழிபாடு நிகழவேண்டும். அவ்வழிபாட்டுக் குக் குடும்பத்திற்கு ஒருவராவது வரவேண் டும் என்ற நியதியை ஏற்படுத்த வேண் டும். அதை நடைமுறைக்குக் கொண்டுவர வும் வேண்டும். தேர், திருவிழாக் காலங் களில் நம் பண்பாட்டை விளக்குகின்ற கலைநிகழ்ச்சிகளுக்கு இடம் தரவேண்டும். நீதிகளையும், இலக்கியக் கருத்துக்களையும், சமயக் கருத்துக்களையும், உலகப் பொது அறிவு வளர்வதற்கேற்ற கருத்துக்களையும் கிராம மக்களுக்கு அடிக்கடி வழங்குவ தற்குக் கற்றவர்களையும், அருளாளர்களையும் கொண்டு சொற்பொழிவுகளையும், திரைப் படக்காட்சிகளையும், பொருட்காட்சி சாலை களையும் கிராமங்களில் அமைக்கவேண்டும்.

கிராம மக்களிடையே சிறு சிறு பூசல்கள் ஏற்பட்டால் அவற்றை அவர்களுக்குள் ளேயே தீர்த்துக்கொள்ள வேண்டும். கிரா மத் தலைவனுடைய நியாயத் தீர்ப்புக்குச் செவிசாய்த்துப் பூசல்களை ஒழித்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்து கொண்டால் வழக்கறிஞர்களுக்கும் அர சாங்கத்துக்கும் போகும் பணம் கிராமப் பொதுக்காரியங்களுக்குப் பயன்படும். கிரா மத்துக்கு வேண்டிய குடிநீர் வசதி, விளக்கு வசதி, சாலை வசதி, குடியிருப்பு வசதி முத லியவைகளைக் கிராம மக்களே செய்து கொள்ளலாம். அவற்றிற்கெல்லாம் வேண் டிய தொகை கிராமத்திலிருந்தே கிடைத்து விடும். அரசாங்கத்தை அண்டிப் பிழைக்க வேண்டிய அவசியமில்லை.

என்ஜினியராகவும், மருத்துவராகவும் ஆவதற்குப் படிக்கும் ஒவ்வொருவரும் படித்துமுடித்த பின் தாங்கள் கற்றதைத் தங்கள் கிராம மக்களுக்குப் பயன்படும்படி செய்ய வேண்டும். தாங்கள் வாழ்ந்துவரும் கிராமத்தைப் புறக்கணித்து விட்டு நகரங் களுக்கோ அயல்நாடுகளுக்கோ சென்று வாழும் மோகத்தை ஒழிக்கவேண்டும். கிரா மத்தில் வாழும் கற்றவர்களும் மற்றவர் களும் நல்வாழ்விலும், நல்ல மனப்பாங்கி லும், சேவை செய்வதிலும் முன்னேறி வரு வதே கிராம முன்னேற்றமாகும். கிராமத் தில் உள்ளவர்கள் தேர்த் திருவிழாக் காலங் களில் தெய்வத்துக்குப் பொங்கல் இடுவார் கள். அன்றைக்குப் பொங்கல் இடுவதைப் பொது இடத்தில் ஒன்று சேர்த்து ஊர் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி ஒத்த மனப் பான்மையுடனும், மகிழ்ச்சியுடனும் உணவு எடுத்துக் கொள்ளவேண்டும். இது ஆண் டுக்கு ஒரு முறை நிகழ்ந்து வருமானால் ஒற் றுமை மனப்பான்மையும், கிராம மக்கள் அனைவரும் ஒன்று என்ற சகோதர உணர்ச்சி யும் மக்களிடையே வளர்ந்துவரும்.

பல கிராமங்களும், நகரங்களும் சேர்ந் ததுதான் நாடாகும். நாட்டைப் பாது காப்பதும், பரிபாலிப்பதும் அரசாங்கத்தின் பொறுப்பாகிறது. வேலியே பயிரை மேய் வது போன்று இன்றைக்கு நாட்டைப் பாது காக்க வேண்டிய அரசாங்கம் நாட்டைப் பாழ்படுத்தி வருகிறது. நாட்டு மக்கள் அதை உணராது இருக்கின்றனர். அரசாங் கத்துக்கு மக்களிடமிருந்து வாக்குப் பதி வைப் பெறுவதுதான் முக்கிய லக்ஷியமாக இருந்து வருகிறது. அரசாங்கத்துக்கும், மக்களுக்கும் பாடம் புகட்டுகின்ற முறையில்

இறைவனின் திட்டம் நிகழ்கிறது. மனப் பான்மை கெட்டுப்போய்விட்டால் பலகேடு கள் உருவாகின்றன. இன்றைக்குத் திரைப் படங்களும், பத்திரிகைகளும் மக்களுடைய மனப்பான்மையைப் பெரிதும் கெடுத்து வருகின்றன. கொள்ளை அடிப்பவனும் கொலை செய்பவனும் பத்திரிகைகளைப் படிப் பதிலிருந்தும் திரைப்படங்களைப் பார்ப்பதி லிருந்தும் உருவாகின்றார்கள். கொலை பண் ணாதே, திருடாதே என்று உபதேசம் செய்து கொண்டு திருடுவதற்கும், கொலை புரிவதற் கும் பத்திரிகைகள் மூலமாகவும், திரைப் படங்கள் மூலமாகவும் வழிகாட்டித் தரப் படுகின்றது. உடல் உணர்ச்சியை வென்று பழகுவதுதான் மானுடன் மேல்நிலை அடை வதற்கு உற்ற உபாயமாகும். உடல் உணர்ச் சிக்கு வசப்பட்டு உடலின்பம் பெற விரும்பு வது காமம் எனப்படும். காமத்தை வெல் கின்றவன் யோகி ஆகின்றான். காமத்தை வளர்ப்பவன் போகி ஆகின்றான். திரைப் படங்களும் பத்திரிகைகளும் மக்களிடத் தில் வேண்டியவாறு காம உணர்வை வளர்த்து வருகின்றன. ஆகையால் மக்கள் போகிகளாக மாறி வருகிறார்கள். இந்தச் சீர்கேட்டைப் பற்றி அரசாங்கம் கவலைப்படு வதாக இல்லை. இச்சீர்கேட்டை மேலும் வளர்ப்பதற்கு அரசாங்கம் உதவி வருகிறது. காம உணர்ச்சியை ஊட்டக்கூடிய திரைப் படங்களுக்கும், பத்திரிகைகளுக்கும் அர சாங்கம் தடைபோட முன்வரவேண்டும். மக்களிடையே அன்பையும், அறிவையும், பண்பையும், தியாகத்தையும், சேவை மனப் பான்மையையும் வளர்க்கக்கூடிய திரைப் படங்களுக்கும் பத்திரிகைகளுக்கும் அர சாங்கம் வேண்டியவாறு ஆதரவு அளிக்க வேண்டும். பொதுமக்களிடையே நல்ல மனப்பான்மை வளர்வதற்கு இதுவே உபாய மாகும். ஒவ்வொரு துறையிலும் தலைமை அதிகாரியாக இருப்பவர் அன்பு உள்ளமும் சேவை உள்ளமும் படைத்தவராக இருக்க வேண்டும்.

மககளுடைய உள்ளத்தில் நாட்டு உணர்ச்சி ஓங்கவேண்டும். குடும்பத் தலை வன் குடும்பப் பொறுப்பு உணர்ச்சி உடைய வனாக இருப்பது போன்று நாட்டு மக்கள் நாட்டைப் பற்றிய பொறுப்பு உணர்ச்சி உடையவர்களாக இருக்கவேண்டும். தங்களி டத்தில் என்ன திறமை இருக்கிறதோ அதை நாட்டு நலனுக்குப் பயன்படுத்த வேண்டும். நாட்டு நலன் கருதி ஒவ்வொருவரும் தங்க ளுக்கு அமைந்த தொழிலைச் செய்யவேண் டும். தொழிலில் வஞ்சகம் செய்வதோ பிறரை ஏமாற்றுவதோ கூடாது. நாட்டுக் காக நாம் இன்றைக்கு என்ன செய் தோம் என்று ஒவ்வொருவரும் நினைத் துப் பார்க்கவேண்டும். சுயநலமற்று நாள் தோறும்எவ்வளவுநேரம் இன்றைக்குப் பணி செய்தோம் என்பதை ஒவ்வொருவரும் எண் ணிப் பார்க்கவேண்டும். மனதில் சுயநலம் துடைத்து எடுக்கப்படும்பொழுதெல்லாம் உள்ளத்தில் ஓர் அலாதியான இன்பம் உண் டாவதை உணரலாம். உலக சுகத்தை விடச் சுயநலமற்றுச் செயல்புரிவதால் உண்டாகும் இன்பம் எவ்வளவு மேலானது என்பதை அப்பொழுது அறியலாம்.

நாடுகளின் தொகுப்பு உலகமாகும். இவ்வுலகத்தில் எண்ணற்ற உயிர்கள் வாழ்ந்து வருகின்றன. மனித உயிர் எல்லா உயிர்களுக்கும் மேலானது ஆகிறது. வையகத்திலுள்ள உயிர்கள் அனைத் துக்கும் அன்பு காட்டக்கூடியவன் மனிதன் ஆவான்.

> **எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும்**
> **நின் தெய்வஅருட்**
> **கருணை செய்யாய் பராபரமே**

என்கிறார் தாயுமானவர். மனதின் விரிவை இக்கண்ணியில் விளக்குகிறார் தாயுமானவர். தன்னைப்பற்றி நினைத்து, குடும்பத்தைப் பற்றி நினைத்து, நாட்டைப்பற்றி நினைத்து உலகத்தைப்பற்றி நினைத்து, தெய்வத் தைப்பற்றி நினைக்கின்றவளவு மனம் விரி வடைந்துகொண்டே போகின்றது. அங் ஙனம் மனதை விரிவடையச் செய்வதே வாழ்வு எனப்படும். தெய்வப் பற்று மன தில் பெரிய மாறுதலை உண்டுபண்ணுகிறது. ஓர் எல்லைக்குள் உட்பட்டுக் கிடப்பது உல கப்பற்று ஆகும். எல்லையைக் கடந்து போவது தெய்வப்பற்று ஆகும். மனதில்

தெய்வப்பற்று வளர்கின்றபொழுது அதைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கின்ற தளைகள் எல்லாம் நீங்குகின்றன. கூட்டைவிட்டு வெளியேறிய பறவை வானில் சுதந்தரமாகத் திரிவது போன்று உலக பந்தத்திலிருந்து விடுபட்ட மனது சுதந்தரமாகத் தெய்வப் பெற்றியில் திளைத்திருக்கிறது. பறவையைக் கூட்டுக்குள் அடைத்துவைத்து அதற்கு எவ்வளவு உபசாரம் செய்தாலும் அதற்கு நாம் நன்மை செய்தவர்களல்லர். வானில் அதைச் சுதந்தரமாகப் பறக்கவிடுவதே அதற்குநாம்செய்கின்ற நன்மையாகும். உலகச் சுகங்களைக் கொடுத்து ஒருவனை உலகத்தில் கட்டுப்படுத்தி வைத்திருப்பது அவனுக்குச் செய்கின்ற நன்மை ஆகாது. உலக பந்தத்திலிருந்து ஒருவனுடைய மனதை விடுவிப்பதற்குச் செய்கின்ற உதவியே உண்மையான உதவியாகும்.

கடலில் அலை தோன்றுகின்றது. கடல் நீர் நாமரூபம் எடுக்கும்பொழுது அதற்கு அலை என்ற பெயர் வருகிறது. அலை விரிந்துகொண்டே போய் நாமரூபத்தை இழந்துவிடும்பொழுது அது கடல்மயமாகிவிடுகிறது. அலையாகத் தோன்றிய நீர் கடலாக விரிவடையவேண்டும். கடலினுடைய அம்சம் தான் அலையாகும். கடலின் ஒரு சிறுபகுதி சுருங்கி அலையாக வடிவெடுத்துப் பிறகு அது விரிந்து கடல்மயமாகிறது. இது கடலினிடத்து ஓயாது நிகழ்ந்து வருகிறது. இறைவனுடையஅம்சம்நாமரூபம்எடுக்கும்பொழுது ஜீவன் ஆகிறது. ஜீவன் விரிவடைந்துகொண்டே போய் நாமரூபத்தை இழந்துவிடும்பொழுது பரசொரூபமாகிறது. ஜீவன் பரசொரூபமாகத் தன்னை விரித்துக்கொள்வதே ஜீவனுடைய வாழ்க்கைத் திட்டமாகும்.

தன்னை உடல்மயமாக உணரும் நிலையில் ஜீவபோதம் வடிவெடுக்கிறது. தன்னை உலகமயமாக உணரும் நிலையில் ஜீவபோதம் விரிவடைகிறது. தன்னைப் பரசொரூபமாக உணரும்பொழுது ஜீவபோதம் தேய்ந்து பரபோதம் ஓங்குகிறது. ஜீவன் தன் ஜீவபோதத்தைத் துடைத்துத் தள்ளுவதை வாழ்க்கையில் செய்தாக வேண்டும். உடல் வாழ்க்கையில் பற்றுவைத்துள்ள ஜீவன் உலக முழுவதையும் தன் உடல் மயமாகக் கருதும் நிலைக்கு ஜீவபோதத்தை விரிவடையச்செய்ய வேண்டும். உலகிலுள்ள உயிர்கள் அனைத்தையும் தன் உயிர் மயமாகக் கருதுவதே ஜீவபோதத்தை விரிவடையச் செய்வதாகும். இதனைத்தான் தாயுமானவர் 'எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின்தெய்வஅருட்கருணை செய்யாய் பராபரமே' என்கிறார். மானுட வாழ்வு பரபோதம் பெறுவதில் முடிவடைகிறது. ஜீவபோதம் உள்ளளவும் பிறப்பு இருந்துகொண்டே இருக்கும். ஜீவபோதத்தை விரிவடையச் செய்து வாழ்வைப் பெருவாழ்வாக்க வேண்டும். பரபோதம் பெற்று, பரஞானம் பெற்று பரமானந்தத்தில் திளைத்திருப்பது மானுட வாழ்வின் குறிக்கோள். இந்நிலைக்கு நம்மை விரிவடையச் செய்துகொண்டே போவது நம் வாழ்க்கைத் திட்டமாக இருக்கவேண்டும்.

---

# செய்திகள்

**நிகழ்பவை:**

26-3-63 ஞாயிற்றுக்கிழமை அன்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜயந்தி விழா திருப்பராய்த்துறை தபோவனத்தில் சிறப்பாகக் கொண்டாடப் பெறும். அன்று காலை 6 மணிக்கு ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திரு உருவப் படத்தைத் திருப்பராய்த்துறை சிவாலயத்திற்கு நாம பஜனையுடன் ஊர்வலமாக எடுத்துச் சென்று வருவார்கள். அன்று காலை 9-30 மணிக்கு ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்களின் பெற்றோர் கூட்டம் ஸ்ரீ விவேகானந்த வித்யாவன உயர்நிலைப்பள்ளியில்நடைபெறும்.

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தில் மார்ச் மாதம் 22, 23, 24 தேதிகளாகிய செவ்வாய், புதன், வியாழன் இத்தினங்களில் மூன்று நாட்கள் அந்தர்யோகம் நிகழும். இதுசம்பந்தமான விவரத்துக்கு மாசி மாதம் தர்ம சக்கரம் அட்டை இரண்டாம் பக்கத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | ப்ரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் புதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரி | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | | |
| கருணாகரக் கடவுள், விரிவுரை | ... | 3-50 |
| பரிபூரணானந்தம் ஷி | ... | 3-00 |
| சின்மயானந்த குரு ஷி | ... | 3-00 |
| ஆனந்தமானபரம் ஷி | ... | 3-00 |
| சுகவாரி ஷி | ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷி | ... | 3-00 |
| எங்குநிறைகின்றபொருள் ஷி | ... | 2-50 |
| பரசிவ வணக்கம் ஷி | ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் ஷி | ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி ஷி | ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| அமரநாத யாத்திரை | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் (நாடகம்) | ரூ | 1-00 |

| | | |
|---|---|---|
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... | 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 1-00 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... | 1-00 |
| தபோபலன் (நாடகம்) | ... | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்விக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக் கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டமஎது? ஞானகாண்டமஎது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| The Bhagavad Gita (11th Imp) | ... | 24-00 |
| Tirukkural ( with plastic cover ) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... | 8-00 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| *Introducing the Gita | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The Student | ... | 1-25 |
| TAT TVAM ASI That Thou Art IN Tayumana Swami | ... | 1-00 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக கீதை, திருவாசகத்திற்கு ரூ. 5-00ம், மஞ்ஜரிக்கு ரூ. 1-80ம் மஹாபாரதத்திற்கு ரூ. 1-80ம் இராமாயணத்திற்கு ரூ. 1-60ம் தினசரி தியானத்திற்கு ரூ 1-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 3-00 முதல் ரூ. 5.00 வரையும் சேர்த்து அனுப்புங்கள். *இப்புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

# வேண்டுகோள்

திருப்பராய்த்துறையில் உள்ளூர் மாணவ மாணவிகளுக்காக என்று தபோவனம் நடத்திவரும் விவேகானந்த உயர்நிலைப்பள்ளி இதுகாறும் பழங்கால வேத பாடசாலை, அன்னசத்திரம் ஆகிய பழைய கட்டடங்களில் நடைபெற்று வந்தது. ஆண்டுதோறும் மராமத்து பண்ணிக்கொண்டே பள்ளி நடைபெற்று வந்தது. 6 முதல் 10 ஆம் வகுப்புவரை சுமார் 600 பிள்ளைகள் அதில் படித்து வருகிறார்கள். இதற்கு நல்ல கட்டடம் இது நாள்வரை கட்ட வசதிப்படாமலேயே நடந்துகொண்டிருந்தது. இவ்வாண்டு ஜனவரி மாதத்தில் இதற்கென்று 24 அறைகள் கொண்ட 3 மாடி கட்டடம் கட்டத் துவங்கியுள்ளோம். இக் கட்டடம் பூர்த்தியானதும் இதை மேல்நிலைப் பள்ளியாக்கக் கருதியுள்ளோம். இதன் மூலம் பத்து மைல் சுற்று வட்டாரத்தில் சுமார் ஆயிரம் பிள்ளைகள் நல்ல கல்வியும் நல்ல வாழ்க்கைப் பயிற்சியும் பெறுவார்கள். இதன் உத்தேச செலவு ரூபாய் பத்து லட்சம் ஆகும். ஆயினும் இப்போதுள்ள கூலி, சிமெண்ட், கம்பி விலை ஏற்றங்களினால் இந்தக் கட்டடச் செலவு நாம் உத்தேசித்திருக்கிற திட்டத்தில் அடங்குவதாக இல்லை. இந்தத் திட்டத்திற்காக இப்போது நமக்குப் பொருள்வசதி தேவைப்படுகிறது. சேமிப்புப்பணம் வைத்துள்ளவர்கள் பேங்கில் டிபாஸிட் செய்வதுபோன்று இந்த நற்காரியத்திற்குக் கடன் தந்து உதவலாம். ரூபாய் 1000மும் அதற்கு மேற்பட்ட தொகைகளும் ஏற்றுக்கொள்ளப் பெறும். அதற்கு பேங்க் டிபாஸிட் முறையில் மூன்று வருஷகெடு போட்டு ரசீது வழங்கி நூற்றுக்கு வருஷம் ஒன்றுக்கு ஒன்பது வீதம் வட்டி செலுத்துவோம். மூன்று வருஷ கெடு போட்டிருப்பினும் இடையில் அவசரத் தேவையிருப்பின் எப்போது வேண்டுமானாலும் முதலும் வட்டியும் வாங்கிக் கொள்ளலாம். ஆகவே தான் டிபாஸிட்டின் கால அளவைக்கு ஏற்ற வட்டி விகிதம் போடாமல் எவ்வளவு காலத்திற்கானாலும் 9% வட்டி என்று நிர்ணயித்துள்ளது. ஆண்டுதோறும் வட்டி வாங்கிக் கொள்ளா விட்டாலும், அடுத்த ஆண்டிற்கு வட்டி முதலுடன் சேர்ந்து அதுவும் வட்டி பெறுகிறது, ஆகவே தான் 9%வட்டி என்று நிர்ணயித்துள்ளது. பணம் அனுப்பும் முறை: ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் என்ற பெயரில் தாங்கள் அனுப்புகிற தொகைக்கு திருச்சியில் உள்ள பேங்குகளில் மாற்றத்தக்கதாக டிராப்ட் எடுத்து A/C Payee என்று கிராஸ் செய்து சாதாரணத் தபாலிலேயே இங்கு அனுப்பிவைக்கலாம். யார் பெயருக்கு ரசீது போடவேண்டுமோ அவரது தபால் விலாசம் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

திருப்பராய்த்துறையில் உள்ளூர் மாணவ மாணவிகளுக்கு இப்பள்ளிக் கட்டடம் அமையவேண்டியது அவசியம். தொழில் துறையில் பெரிய தொழிற் சாலைகள் ஏற்படுவதற்குப் பங்காளர்கள் ( share holders ) முன்வருவதுபோன்று இதற்கு முதலீடு செய்பவர்களுக்கு மூன்று வருடங்களில் வட்டியும் முதலும் திரும்ப வந்துவிடுகிறது; ஒரு ஸ்தாபனமும் உருவாகிறது. பணவசதி உள்ளவர்கள் இப்பள்ளிக் கட்டடம் உருவாக தபோவனத்தில் வட்டிக்குப் பணம் டிபாசிட் செய்து உதவ மனமுவந்து முன்வருவார்களாக.

சித்பவானந்த

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.